# 'ராக்' இசையில் ராக்கெட் வேகம்!

○○ "நான் பேசுவது கேட்கிறதா?"

"ய்... ஏ... ஏ..." ஆரவாரம்.

"உங்கள் ஊரில் வந்து பாடுவதில் எனக்கு மகிழ்ச்சி; உங்களுக்கும்தானே?"

"ய்... ஏ... ஏ..."

"அப்படியென்றால்... கம் ஆன்... எழுந்து நின்று கொள்ளுங்கள்; கைதட்டுங்கள்... உங்கள் மகிழ்ச்சியைத் தெரிவியுங்கள்..."

கைதட்டலும், ஆரவாரமும் வானில் அலைமோதுகின்றன.

○○ சுற்றிலும் பார்க்கிறோம். ஓர் உடல் ஊனமுற்ற பெண் நாற்காலியில் அமர்ந்திருக்கிறார். எழுந்து நிற்கத்தான் முடியவில்லையே தவிர, தலையையும், கையையும் ஆட்டுவதும், கூடவே, தன்னை மறந்து உரத்த குரலில் பாடுவதும், அவர் எந்த அளவுக்கு நிகழ்ச்சியை ரசிக்கிறார் என்பதை உணர்த்துகின்றன. ஒரு குறிப்பிட்ட பாடல் முடிந்த போது, தலைக்கு மேலே உயர்ந்து ஆயிரக்கணக்கான கைகள் தட்டப்படுவதை நேரில் பார்த்த போது ஏற்பட்ட திரில்லை, எழுத்திலே கொண்டு வருவது கஷ்டம்.

○○ இந்தியாவின் நெம்பர் ஒன் 'ராக்' மியூசிக் குழுவான 'ராக் மெஷின்' தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் நிகழ்ச்சியை வழங்கிய போது கண்ட காட்சிகள் தாம் மேலே கூறப்பட்டவை. மேடையின் இரண்டு புறங்களிலும், மொத்தம் ஒரு டஜன் ஸ்டீரியோக்கள், இசையைப் பல மடங்கு ஒலி பெருக்கி, ரசிகர்களை இசை இடியில் அதிர வைத்தன.

○○ ராக் மெஷின் குழு, சென்னைக்கு வருவது இதுவே முதல் தடவை என்றாலும், இந்தியாவின் மற்ற பெரிய நகரங்களில் பல தடவை நிகழ்ச்சிகள் நடத்தியிருக்கிறது. ருஷ்யாவில் இந்தியக் கலைவிழா நடந்த போது, ருஷ்ய ரசிகர்களை ராக் இசையால் ஆட்டிப் படைத்துவிட்டு வந்தவர்கள் இவர்கள். தாமாகவே பாடல்கள் எழுதி, இசையமைத்து, இசைத் தட்டுகளும் வெளியிடும் முதல் இந்திய ராக் இசைக் குழு இது தான். ஒரு பாடகர், மூன்று கிடாரிஸ்ட்டுகள், ஒரு டிரம்மர், ஒரு கீபோர்டு இயக்குனர் என்று ஆறு பேர் கொண்ட பம்பாயைச் சேர்ந்த குழு.

○○ சென்னையில் நிகழ்ச்சியை ஏற்பாடு செய்த இளைஞர் சந்திரன் கிறிஸ்டியனைச் சந்தித்தபோது, சொன்னார்: 'ராக்'கில் ஓர் அசாத்திய வேகம் இருக்கும். டான்ஸ் மூவ்மெண்ட்களில் எந்தவிதக் கட்டுப்பாடு மில்லை; மனம் போல ஆடலாம். பாடல் என்றால் காதலைப் பற்றித்தான் இருக்கும் என்ற வழக்கத்தை அடியோடு மாற்றி, அணு ஆயுதப் போர் எதிர்ப்பு, இளைய தலைமுறையினரின் கோபமான மனவெளிப்பாடு, உலக அமைதி, போதை மருந்துகளுக்கு எதிர்ப்பு என்று பலவிதமான விஷயங்களைப் பற்றியும் பாடல்கள் எழுதி, இசையமைத்துப் பாடப்படுகின்றன.

○○ இந்த நிகழ்ச்சியின் மூலம் கிடைத்த தொகையில் ஒரு பகுதி, போதை மருந்துக்கு அடிமையானவர்களை மீட்கும் பணிக்குப் போகிறது என்றார்கள்.

○○ நிகழ்ச்சிக்கு வந்த ஒரு பெண்ணின் பனியனில், **"Girls give more pleasure than drugs"** என்று எழுதப் பட்டிருந்தது! ரொம்பக் குறும்புதான்!

— ஜானி

படம்: **யோகா**



# அடுத்த நூற்றாண்டுக் கனவு— ராங் நம்பர் விழாத டெலி.ஃ.போன்!

## 3

சென்ற வாரக் கட்டுரையின் கடைசியில் உள்ள கேள்விக்கு விடை: 167 என்பது பைனரியில் 1010111. இது எப்படி என்று உங்களுக்குத் தெரியாவிட்டால் பள்ளியில் பத்தாவது படிக்கும் உங்கள் மகளையோ மகனையோ அல்லது தம்பி தங்கையையோ கேளுங்கள்!

பைனரி என்பது விரயமான விஷயம் அல்ல. எந்த எண்ணிக்கையையும் பைனரி முறையில் 1, 0 க்களை வைத்துக் கொண்டே எழுதலாம். என்ன, இலக்கங்கள் அதிகமாகும் — பரவாயில்லை. பைனரியில் ஒரு முக்கியமான மகிழ்ச்சி அதன் எளிமை. இப்போது பதினான்கு என்கிற எண்ணை பைனரி மூலம் ஓர் இடத்திலிருந்து மற்றொரு இடத்துக்கு அனுப்ப வேண்டும் என்றால், பதினாலின் பைனரி வடிவம் என்ன? 1110. ஒரு டார்ச் விளக்கு மூலம் இதை அனுப்ப வேண்டுமெனில் 1 என்பதற்குப் பதிலாக, டார்ச் விளக்கை ஏற்றி 0 வுக்குப் பதில், அதை அணைக்கலாம். அல்லது 1 என்பதற்கு விசில், ஒரு சுருதியில் சீட்டியடிக்கலாம், 0 என்பதற்கு மற்றொரு சுருதியில். இப்படி எந்த வகையிலும் செய்தி அனுப்பலாம்.

நடைமுறையில் சீட்டியடித்தா, லைட் அடித்தா அனுப்புகிறார்கள்?

இல்லை. ஆனால், டார்ச்சுக்குப் பதில் ஒரு நுட்பமான எல். இ. டி. LED (Light Emitting Diode) என்கிற பல்பை வைத்துக் கொண்டு, ஃபைபர் ஆப்டிக்ஸ் (Fibre Optics) என்கிற மயிரிழை நூல் போன்ற கண்ணாடிக் குழாய் மூலம் அதிவேகத்தில் செய்திகளை அனுப்புவது இம்மாதிரி டார்ச்சை ஏற்றி அணைக்கும் முறையில்தான்.

கம்ப்யூட்டர் செய்திகளை ஒரு டெலிபோன் கம்பி மூலம் அனுப்புவது இந்தச் சீட்டி முறையில்தான். 1 என்பதற்கு ஒரு சுருதியும் 0 என்பதற்கு மற்றொரு சுருதியும் அனுப்புகிறார்கள். ஃபைபர் ஆப்டிக் முறையில் அதிவேகமாக விளக்கை ஏற்றி அணைக்க முடியும். எத்தனை எத்தனை வேகம்? ஒரு செகண்டுக்கு எத்தனை துடிப்புக்கள்?

1988 — இன் இறுதியில் ஜப்பானிய ஃபுஜிட்ஸு கம்பெனி, பதினைந்து கோடி துடிப்புக்களை ஒரு ஃபைபர் நூலில் அனுப்பியது; டிசம்பரில் அட்லாண்டிக் கடலின் ஆழத்தில் அமெரிக்காவின் இருபத்தேழு கம்பெனிகள் ஒன்று சேர்ந்து புதைத்த ஃபைபர் ஆப்டிக் இணைப்பில், நாற்பதாயிரம் டெலிபோன் பேச்சுக்கள் ஒரே சமயத்தில் செல்கின்றன. இதுவரை கடலடியில் புதைத்த எல்லா கேபிள்களையும் வானில் மிதக்கும் எல்லா ஸாட்டிலைட்டுகளையும் ஒன்றாகச் சேர்த்து, அந்த ஓர் இணைப்பு மிஞ்சி விட்டது!

மோடம் என்று சொல்லப்படும் கம்ப்யூட்டர் செய்தி அனுப்பும் சாதனம் இத்தனை வேகமானதல்ல. அதில் ஒரு செகண்டுக்கு 19200 சுருதித் துணுக்குகள் அனுப்புவது சாத்தியம். அனலாக் வடிவச் செய்தியை — அது படமோ பேச்சோ எப்படி இருந்தாலும் — முதன் முதலில் டிஜிட்டல் முறையில் 1, 0 க்களாக மாற்றி விட்டால், அதை அனுப்புவதில் அதிவேகம் காண முடிகிறது. மேலும் இந்த அதிவேகத் துணுக்குகளுக்கு இடையில் மற்ற செய்தித் துணுக்குகளையும் செருகி ஒன்று சேர்த்து அனுப்ப முடிகிறது. ஒரு கம்பியில் ஒரு டெலிவிஷன் படம், நூற்றுக் கணக்கான டெலிபோன் பேச்சுக்கள், கம்ப்யூட்டர் தொடர்



* சில அயல்நாடுகளில் கிரெடிட் கார்டுகளை யோகித்து போனில் பேச முடியும்.




நன்றி: ஆனந்த விகடன்.

பான செய்திகள் எல்லாவற்றையும் கலந்து அனுப்பும் சாதனையை இந்த நாட்களில் படைத்து விட்டார்கள். இதற்கு மல்ட்டி ப்ளெக்ஸிங் என்று பெயர். நம் நகரங்களை இணைக்கும் மைக்ரோவேவ் சாதனங் களிலும் தரையடி கேபிள், ஸாட்டிலைட் தொடர்பு மூலமும் இந்த முறையில் பற்பல பேச்சுக்களையும் படங்களையும் கலந்து அனுப்பி, மறுமுனையில் பிரித்துக் கொள் கிறார்கள். ஒரு குட்ஸ் வண்டியில் அல்லது லாரியில் சென்னையிலிருந்து டெல்லிக்குப் பல பேர்களின் சாமான்கள் போகிற போது, ஒன்று சேர்ந்து போகின்றன. முடி வில் அவை பிரிக்கப்பட்டு யார் யாருக்கு எது போய்ச் சேர வேண்டுமோ அப்படிப் பிரித்துத் தரப்படுகின்றன. இதுபோல்தான் அது. தொகுத்தல் — மல்டிப்ளெக்ஸிங்; பிரித் தல் டி — மல்டிப்ளெக்ஸிங்.

இந்த முறையில் ஆயிரக்கணக்கான டெலி போன் பேச்சுக்களை நம் நகரங்களின் இடையில் டிஜிட்டல் வடிவத்தில் அனுப்பும் சாதனங்கள் நம் நாட்டில் வந்திருக்கின்றன. தற்காலத்தில் நீங்கள் கவனித்திருக்கலாம், எஸ் டி டி என்பது மூன்று நான்கு தடவை சுழற்றினால் கிடைத்து விடுகிறது. அதுவும் வெளிநாட்டுக் கால்கள் சற்றுச் சுலபமாகவே கிடைக்கின்றன. இதெல்லாம் இப்போது சாத்தியமாகவேயிருப்பது டிஜிட்டலாக அனுப்புவதால்தான்.

நாட்டின் டெலிபோன் நிலைமையைப் பார்ப் போம். மார்ச் 1948 — இல் இந்தியாவில் மொத்தமே 82,000 டெலிபோன்கள்தான் இருந்தன! அது மார்ச் 1987 — இல் 35 லட்சமாக அதிகரித்தது. நகரங்களை இணைக்கும் ட்ரங்க், இணைப்புக்கள் ஏறக் குறைய ஒரு லட்சம். 20834 கிலோ மீட்டர் கேபிள், 26514 கி. மீ. மைக்ரோவேவ் தொடர்பு. 32 ஸாட்டிலைட் இணைப்புக் கள். 42000 டெலக்ஸ்.... இதெல்லாம் இருந்தும் மேல்நாடுகளுடன் ஒப்பிட்டால் போதாது. 1987 மார்ச்சில் வெய்ட்டிங் லிஸ்ட் பதினொரு கோடி. ஆறு கோடிக் கும் குறைவாக இன்று இருப்பதை, அடுத்த நூற்றாண்டுக்குள் இரண்டு கோடியாக குறைக்கத் திட்டமிட்டிருக்கிறார்கள். நூற் றாண்டின் இறுதியில்

1. கேட்ட மாத்திரத்தில் டெலிபோன் இணைப்புக் கிடைக்க வேண்டும்.
2. ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு 'பப்ளிக் கால் ஆபீஸ்' — பொதுத் தொலை பேசி நிலையம் — (மொத்தம் ஆறு லட்சம் தேவைப்படும்.)
3. நகரங்களுக்கு ஆறு லட்சம் பொதுத் தொலைபேசி நிலையங்கள்.
4. வர்த்தக, தொழில் துறையினருக்குச் சில தனிப்பட்ட டெலிபோன் வசதி கள் தேவை.

எனவே, இந்த நூற்றாண்டின் இறுதிக் குள் நாம் எதிர்பார்க்கக் கூடிய திரைக்கதை' வசனம் என்ன?

ஸாம் பெட்ரோடா என்று ஒருவரைப் பற்றித் தெரிய வேண்டும். தலையைப் பரப் பிக் கொண்டு, ஸூட்டணிந்த தேவ தூதர் போல இவரை டெலிவிஷனில் அடிக்கடி பார்த்திருப்பீர்கள். இவரிடம் நம்முடைய 'டெக்னாலஜி மிஷன்' ஒப்படைக்கப்பட்டி ருக்கிறது. இவருடைய கனவுகள் நிஜமா னால், அடுத்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் கிராமங்களில் எல்லாம் டெலிபோன்கள் வந்துவிடும். மனுப் போட்டால் ஒரு மாதத் தில் டெலிபோன் யாருக்கும் கிடைக்கும். அந்த டெலிபோனில் எடுத்தால் டயல் டோன் கிடைக்கும். டயல் செய்தால் உடனே ரிங் அடிக்கும். அவர்கள் எடுத்தால் ராங் நம்பர் இல்லாமல் நீங்கள் விரும்பியவரே பதிலிருப்பார்! 1995 — இல் எதிர்பார்க்க

சுஜாதா



லாம். டெலிபோன் வந்து விட்டால் மட்டும் போதாது. அந்த டெலிபோனுக்குத் தேவை ஏற்படுத்தும் சந்தர்ப்பங்கள்:

கிராமத்தில் யாருக்காவது உடம்பு சரியில்லை என்றால் உடனே அண்மை நகர ஆம்புலன்ஸுக்கு போன் பண்ணலாம். இதற்கெல்லாம் அர்த்தம் கிடைக்க போன் மட்டும் போதாது. உடன் கிராமங்களுக்கு நல்ல சாலைகளும்கூப்பிட்ட குரலுக்கு வரும் ஆம்புலன்ஸுகளும் ஆஸ்பத்திரிகளில் இடமும் வேண்டும். இல்லையெனில் போன் விரயம். மதன் கார்ட்டூன் போல ஆகி விடும்.

ஆம்! இது ஓர் உபயோகம். மேலும், விதைப்பதைப் பற்றியோ, அறுவடை பற்றியோ, தண்ணீர் விடுவதைப் பற்றியோ, விவசாய அதிகாரிகளிடம் சந்தேகம் கேட்க டெலிபோன் உபயோகிக்கலாம். இதெல்லாம் சரியான இந்தியக் கனவுகள் இல்லை. பெட்ரோடா ஒரு பேச்சின் போது சொன்னார்: 'கிராமத்தில் இருக்கும் விவசாயிக்குச் சுபிட்சம் ஏற்பட்டு, மகனை விவசாயம் படிக்க — ஆம் விவசாயம் படிக்க — அமெரிக்கா அனுப்பி, அங்கிருந்து 'அப்பா நல்லாயிருக்கீங்களா?' என்று அவன் போன் பண்ணி விசாரிக்க, டெலிபோன் வேண்டும் என்ற கனவுதான் அடுத்த நூற்றாண்டுக் கனவு.'

எனக்குத் தெரிந்தவரும் நல்ல தமிழார்வருமான டாக்டர் ராதாகிருஷ்ணன் மாண்ட்ரியாலில் கன்கார்டியா பல்கலைக் கழகத்தில் கம்ப்யூட்டர் இயல் பேராசிரியராக இருக்கிறார். அவர் தம் பெற்றோருடன் பேச வேண்டுமென்றால், காஞ்சிபுரத்தருகில் கிராமத்திற்குப் பேச வேண்டும். பேசலாம். போஸ்ட் ஆபீசைக் கூப்பிட்டு; அழைத்து வரச் சொல்லி, இருபுறத்திலும் 'அலோ அலோ' என்று பத்து நிமிஷம் அலறிவிட்டு, விவரமா லெட்டர் போடறேன்' என்று வைத்து விடலாம்!

இது தெளிவாக வேண்டும் என்றும்தான் பெட்ரோடா விரும்புகிறார். லெட்டர் போடுவதிலும் எழுதப்பட்ட இலக்கியத்திலும் என்ன என்ன மாறுதல்கள் என்று அடுத்த வாரம் பார்ப்பதற்கு முன், வழக்கம் போல க்விஸ்:

ஈ மெய்ல் என்று கேள்விப்பட்டிருக்கிறீர்களா? ஒரு கார்டில் எழுதி அனுப்பலாம் அது என்ன?

1. ஈக்களை ரயிலில் அனுப்புவது.
2. கடிதங்களை விமானத்தில் அனுப்புவது.
3. கம்ப்யூட்டர் மூலம் கடிதம் அனுப்புவது.
4. மூன்றும் இல்லை.

கல்கி காரியாலயத்துக்குக் கிடைக்கும் சரியான பதிலுக்கு ஒரு கம்ப்யூட்டர் புத்தகம் பரிசு.

குலுக்கலில் மூவரைத் தேர்ந்தெடுக்க முடிவு தேதி 21.8.89

(தொடரும்)

## பார்த்த மாதிரி இருக்கிறதோ...?

இவ்விரு சிறுவர்களும் அடுக்கி வைத்திருக்கும் கோப்பைகள், டென்னிஸுக்காக இவர்கள் பெற்றவை. தமிழ் நாட்டின் தலைசிறந்த விளையாட்டு வீரர் ஒருவரின் மகன்கள். இவர்கள் அப்பா...? முகஜாடையைக் கொண்டு கண்டுபிடிக்க முடியாவிட்டால் 15-ம் பக்கம் பாருங்கள்.





# திடுக்கிடச் செய்யும் திரிவேணி அகாடமி!

"இனிமேல் பையனைப் பற்றிக் கவலை யில்லை; நல்ல பள்ளியில் சேர்த்து விட் டோம்" என்று நிம்மதிப் பெருமூச்சு விட்டார் டாக்டர் சந்திரசேகர். ஒரு வாரத் துக்குள்ளேயே பையனிடமிருந்து ஒரு கடிதம் வந்தது: "என்னை உடனே வந்து அழைத்துக் கொண்டு போகவும்; என்னால் ஒரு நிமிடம் கூட இங்கு இருக்க முடி யாது." அந்தக் கடிதத்தையும் அந்தப் பையன் தபாலில் சேர்க்கவில்லை. பள்ளிக்கு வந்த யாரோ ஒருவரிடம் ரகசியமாகக் கொடுத்து அனுப்பியிருந்தான்! உடனே அந்தப் பள்ளிக்கூடத்துக்கு ஓடினார் டாக் டர். கதை கதையாய்ப் பையன் சொன்ன விஷயங்கள் திகைப்பை ஊட்டி வயிற்றெரிச் சலையும் கிளப்பின. பணத்தைப் பற்றிக் கவலைப்படாமல், நல்ல பள்ளி என்று நினைத்துச் சேர்த்தால் இங்கு இவ்வளவு பிரச்னைகளா?

"இங்கு எதுவுமே சரியில்லை; ஆசிரியர் கள் சுத்த மோசம். எல்லாம் வட இந்திய ஆசிரியர்கள். அவர்களுக்கு நாங்கள் சொல்லித் தர வேண்டிய நிலை. பெண் களும் பையன்களும் சேர்ந்து படிக்கும் வகுப்பில் ஆசிரியர்கள் உபயோகிக்கும் மொழி ஆபாசமானது. ஒவ்வொரு நாளைக்கு ஒவ்வோர் ஆசிரியர். பள்ளி திறந்து பல நாட்கள் வரை புத்தகங்கள் தரப்பட வில்லை. மேலும் வீட்டுக்குக் கடிதம் எழு தலாமென்றால், கடிதத்தைத் தணிக்கை செய்து, பள்ளியைப் பற்றி ஏதாவது குறை எழுதியிருந்தால் கடிதத்தையே கிழித்துப் போட்டு விடுவார்கள். பள்ளியில் 'அந்த வசதி இருக்கிறது,' இந்த வசதி இருக்கிறது' என்று ஆசை காட்டும் "பிராஸ்பெக்ட்ஸ்," மற்றும் பேப்பர் விளம்பரங்கள் சுத்த ஹம்பக். ஹாஸ்டலில் சாப்பாட்டைப் பற்றிக் கேட்கவே வேண்டாம், அவ்வளவு மட்டம்! பையன்கள் பெரும்பாலோர் வட மாநிலங்களைச் சேர்ந்தவர்கள். இருபத் தைந்து வயதுப் பையன்களைக் கூட ஒன்ப தாவது வகுப்பில் சேர்த்திருக்கிறார்கள். ஹாஸ்டலில் புகைபிடிப்பதும் போதை மருந்துகள் உபயோகிப்பதும் சகஜம். பையன்களை அடிப்பதற்கென்றே கொடுமைக்கார உபாத்தியாயர்கள் இங்கு இருக்கிறார்கள். பல பையன்கள் வெளியில் உள்ள பள்ளியில் பெயிலாகி இங்கே வந்து சேர்ந்தவர்கள். தினசரி கடுமையான உடற் பயிற்சிகளைச் செய்யச் சொல்கிறார்கள். ஆனால் அதற்கேற்ற சாப்பாடு கிடையாது. தினசரி ஐந்து பேர் சேருகிறார்கள் என் றால் ஐந்து பேர் பள்ளியை விட்டு விலகிச் செல்கிறார்கள். ஏதாவது உடம்பு சரியில்லை என்று கேம்பஸில் உள்ள ஆஸ்பத்திரிக்குப் போனால், டாக்டர், ஜலதோஷத்துக்குத் தூக்க மாத்திரை தருகிறார்" — டாக்டரின் பையன் அடுக்கிய குற்றச்சாட்டுக்கள் இவை.

அந்தப் பள்ளிக்கு — திரிவேணி அகட மிக்கு — ஒரு விஸிட் அடித்தோம். சென்னை யிலிருந்து காஞ்சிபுரம் போகும் வழியில் வடக்குப்பட்டு என்ற கிராமத்தில் இருக்கிறது திரிவேணி அகடமி. பார்த்தவுடன் "அப்பா டியோவ்!" என்று வியக்க வைக்கிற அளவுக் குக் கட்டடங்கள். வரவேற்பறையைத் தாண்டி யாரும் உள்ளே போக முடியாது. அந்த அளவுக்குப் பயங்கரப் பாதுகாப்பு. ஒன்றாவது சேர்த்தாலும் சரி, பன்னிரண்



டாவது சேர்ந்தாலும் சரி, ஒரு வருடத்துக்குக் கட்ட வேண்டிய பணம் 23000 ரூபாய்! மாணவ, மாணவிகளுக்கு வேண்டிய சகல விஷயங்களையும் பள்ளியே கவனித்துக் கொள்ளுமாம்.

மேற்கு வங்கத்தைச் சேர்ந்த மாணவன் ஒருவனைச் சந்தித்தோம்:

''நான் டார்ஜிலிங்கில் படித்துக் கொண்டிருந்தேன். இந்தப் பள்ளியைப் பற்றிய விளம்பரத்தைப் பார்த்துவிட்டு, ஆசையாய் வந்து சேர்ந்தேன். ஏமாற்றம்தான். நான் படிக்கும் பத்தாவது வகுப்பிற்கு இதுவரை ஒரு மாதத்திற்குள் ஐந்து முறை ஆசிரியர்கள் மாறிவிட்டனர். சாப்பாடு கொஞ்சம் கூடச் சரியில்லை. இங்கு உள்ள பெரும்பாலான மாணவர்கள் நான்-வெஜிடேரியன் சாப்பிடுபவர்கள். ஆனால் இங்கு நான்-வெஜிடேரியன் கிடையாது. அணிவதற்கு, உபயோகப்படுத்திய பழைய உடைகளைக் கொடுக்கிறார்கள்.

'''ஜீப், மோ. பைக் விடக் கற்றுத் தருகிறோம்' என்று சொன்னதெல்லாம் பொய். வீணை கற்றுக் கொள்ளலாம் என்றால் மொத்தமாகப் பள்ளியில் இருபது வீணைகள் கூட இருக்காது. பள்ளியில் கிட்டத்தட்ட 2300 பேர் படிக்கிறார்கள். ஆண்டொன்றுக்கு ஒருவருக்கு ரூ. 23,000 என்ற கணக்கில் வாங்கும் பணம் எவ்வளவு என்று பெருக்கிப் பாருங்கள்!''

இறுதி வகுப்பில் படிக்கும் மாணவி ஒருவரைச் சந்தித்தோம். ''இங்கு இருக்கிற பசங்களுக்குத் திருட்டுப் புத்தி அதிகம் சார். என்னோட செருப்பு இதுவரை இரண்டு முறை காணாமல் போய் விட்டது! உபாத்தியாயர்களுக்கு நாம் சொல்லித் தர வேண்டியதாக இருக்கிறது. கொசுவலை, ரெயின் கோட் எல்லாம் கொடுக்கப்படும் என்றார்கள். இதுவரை ஒன்றும் கொடுக்கவில்லை. மொத்தத்தில் இங்கு நடக்கும் விஷயங்களைப் பார்த்தால் இன்னும் இரண்டு வருடங்களில் பள்ளியின் சாயம் வெளுத்து விடும்.''

திரிவேணி அகடமியை நடத்துவது ''சனாதன தர்ம குருகுலம் லிமிடெட்'' என்ற நிறுவனம். கல்வியை வியாபாரமாக்கிச் செயல்படுவதாகவே தோன்றுகிறது. இதனுடைய இயக்குனர்களின் பட்டியலைப் பார்த்தால் ஆச்சர்யமாய் இருக்கிறது. எல்லாரும் பெரிய பெரிய மனிதர்கள். அகடமிக் கவுன்ஸில் என்ற அமைப்புக்குத் தலைவரே சி. சுப்பிரமணியம்தான்! இவர்களெல்லாம் இந்தப் பள்ளியின் அன்றாட நடைமுறைகளைப் பற்றி அறிந்திருக்கிறார்களா என்பது ச ந் தே க மே! நுகர்வோர் நடவ





## ஆலயம் நாட்டலும்...

ஆக்கிரமிப்பு
தகர்ப்பாளர்களின்
ஆதிக்கத்திற்குள்
வராத ஆண்டவன் —

சில மாதங்களில்
எங்கிருந்தோ
தக்காரும்
மற்றோரும்!

சைக்கிள் முதல்
சந்தனம் வரை
காண்ட்ராக்டர் பிடியில்!

சூரைத் தேங்காய் கூட
சிறுவர்களுக்கில்லை!

ஆண்டவனால்
மனிதன் பிழைத்தது
போய் —
மனிதன்

தனக்காக
ஆண்டவனைப்
பிழைக்க வைத்து...

அது சரி!
அதோ அந்த
வரிசை என்ன
பக்த கோடிகளுக்கா!

இல்லை —

இங்கு கோவில்
வருமுன்பே —
பாதைகளில்
இடம் பிடித்துவிட்ட
பிச்சைக்காரர்கள்!

— சுபாஷிணி.

டிக்கை குழு (Consumer Action Group) என்ற அமைப்புக்கு இந்தப் பள்ளியைப் பற்றி ஏராளமாகப் புகார்கள் வந்திருக்கின்றன. நம்மிடமும் ஏராளமான புகார்கள் தரப்பட்டிருக்கின்றன.

**இ**ந்தப் புகார்களைத் தூக்கிக் கொண்டு, சனாதன தர்மகுருகுலத்தின் இயக்குனர் சிவன் நாயரைச் சந்திக்கச் சென்றோம். அவர் ரொம்ப 'பிஸி' யாக இருந்ததால், அந்த நிறுவனத்தின் மக்கள் தொடர்பு அலுவலர் பாபுவைத்தான் சந்திக்க முடிந்தது.

''கடுமையான ஒழுக்கத்தை நாங்கள் அமுல்படுத்துவதால், மாணவ மாணவிகளுக்குச் சங்கடம் வருகிறது. ஹாஸ்டல் வாழ்க்கை பிடிக்காதவர்கள் ஏதாவது பொய்க் காரணங்களைச் சொல்லி, தப்பித்துப் பெற்றோரிடமே செல்வதற்காகப் பல புகார்களைச் சொல்கிறார்கள். எங்கள் பள்ளியின் பெரும்பாலான மாணவர்கள் வடக்கு, வடகிழக்கு மாநிலங்களைச் சேர்ந்தவர்கள். அயல்நாட்டில் வாழும் இந்தியர்களின் குழந்தைகளும் படிக்கின்றன. கடிதத்தைத் தணிக்கை செய்வது. புகை பிடித்தல், போதை மருந்துகள் உபயோகித்தல் போன்ற புகார்கள் வடிகட்டிய பொய். சிறந்த உணவு கொடுக்கப்படுகிறது. பல ஆசிரியர்கள் வட இந்தியாவைச் சேர்ந்தவர்கள்தான். இதற்குக் காரணம் தமிழ் நாட்டைச் சேர்ந்த ஆசிரியர்களுக்கு ஹாஸ்டலிலேயே தங்கி இருந்து வேலை செய்வது பிடிக்கவில்லை என்பதே.

''பேப்பரில் பார்த்தால் தெரியும், இந்த வருடம் பாடப் புத்தகங்களுக்குப் பற்றாக்குறை. அது எங்களையும் பாதிக்கிறது. சேரும் போது செஸ்ட் எக்ஸ்ரே, ரத்தப் பரிசோதனை, போன்றவற்றுடன் மருத்துவரின் சான்றிதழ் கொண்டு வரவேண்டும். பிராஸ்பெக்டஸில் சொல்லியுள்ள சகல வசதிகளுடன், சிறந்த கல்விப் பயிற்சி அளிக்கப்படுகிறது என்பது எங்கள் பள்ளியின் சென்ற வருட ரிசல்ட்டைப் பார்த்தாலே தெரியும். வேண்டாதவர்கள் கிளப்பிவிடும் வதந்திகள் இவை. சிறிதளவும் உண்மை கிடையாது. இவ்வளவு பெரிய நிறுவனத்தை நடத்துவதில் சில சின்னப் பிரச்னைகள் இருக்கத்தான் செய்யும்.''

**நா**ம் கேட்டுக் கொள்வதெல்லாம் இது தான்: இந்தப் பள்ளிக்குத் தங்கள் பெயர்களைக் கொடுத்திருக்கும் பெரிய மனிதர்கள் அவ்வப்போது திடீர் விஜயம் செய்து மாணவ மாணவிகளுடன் மனம் விட்டுப் பேசிப் பெற்றோர்களிடமும் தொடர்பு கொண்டு, உண்மைகளைக் கண்டறிந்து குறைகளைக் களைய முற்படட்டும்.

— கௌசல்யா

படங்கள்:
பிராஸ்பெக்டஸில் உள்ளவை.

# 40 ஆண்டுகளுக்கு மேலாக நாங்கள் 'சிறிய' அளவிலேயே இயங்கி வந்திருப்பது ...

# ... உங்கள் நம்பிக்கையை 'மிகப்பெரிய' அளவில் பெறுவதற்காகத்தான்!



40 ஆண்டுகளுக்கு முன்னர் நாங்கள் மிகவும் எளிமையாகத்தான் தொடங்கினோம். ஆனால் எங்களுக்கு ஒரு உறுதியான கொள்கை இருந்தது. அது, கவனம்... உறுப்பினர்களைத் தேர்வு செய்வதில் காட்டிய எச்சரிக்கை. ஏனெனில் உறுப்பினர்களின் எண்ணிக்கையை மட்டுமே நாங்கள் முக்கியமாக நினைக்கவில்லை. அதற்கு நல்ல பலன் இருந்தது. பாடுபட்டுத் தேடிய தங்கள் பணம் எங்களிடம் பாதுகாப்பாக இருக்கும் என்று உறுப்பினர்களுக்கு பூரண நம்பிக்கை வந்தது. அந்த நம்பிக்கை இன்று உறுதியாய் வேரோடித் தழைத்திருக்கிறது. இன்று எங்களைப்பற்றி எங்கள் உறுப்பினர்கள் சொல்லும் ஒரே வார்த்தை... நம்பகம்!

நுட்பமான முறையில், எல்லாத் தகவல்களையும் ஆழ்ந்து விசாரித்த பின்னரே ஒரு புதிய உறுப்பினர் சேர்த்துக் கொள்ளப்படுகிறார். இது, உறுப்பினர்கள் தங்கள் பணத்தைப் பற்றிக் கவலைப்படாமல் இருக்க உதவுகிறது.

மற்ற உறுப்பினர்களின் பணத்திற்கு முழுமையான பாதுகாப்போடுதான் ஒவ்வொரு முறையும் ஏலத்தொகை வெளியிடப்படுகிறது. இயற்கையாகவே இந்தத் தொழில் சறுக்கல்கள் நிறைந்தது என்று நாங்கள் நன்றாக உணர்ந்திருக்கிறோம். எனவே, நாங்கள் விவேகமற்ற முறையில் விரிவாக்கத்திற்குத் துடிப்பதில்லை.

சிட்பண்டுகளில் முன்னோடியான பாலுஸ்ஸெரி சிட்பண்ட்ஸ் ஒரு இயக்குநர் குழுவினால் நிர்வகிக்கப்படுகிறது. தொழில் துறையின் வளர்ச்சிக்கும் எங்கள் பங்கு சிறிதல்ல.

சமநிலையும் விவேகமும்... அதுதான் பாலுஸ்ஸெரி.

***40 ஆண்டுகள் இடைவிடாத உழைப்பில் மலர்ந்த நம்பிக்கை***




## தி பாலுஸ்ஸெரி பெனிஃபிட் சிட் பண்ட்ஸ் பிரைவேட் லிமிடெட்

தலைமை மற்றும் நிர்வாக அலுவலகம்:
''பாலுஸ்ஸெரி பில்டிங்ஸ்''
30 சிங்காராச்சாரி தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை 600 005.
கிளைகள்: பம்பாய், பங்களூர், கல்கத்தா, புதுடெல்லி.

* ஏ. பி. வரதராஜ பெருமாள், திருத்தங்கல்.

? பத்து அகாடமி பரிசு பெற்ற ''கான் வித்தி விண்ட்'' பார்த்தீர்களா?

! சுமார் நாற்பதாண்டுகளுக்கு முன் பெற்றோருடன் போய்ப் பார்த்தேன். இடைவேளையில் சாப்பிட அம்மா டிபன், காப்பியுடன் வந்தாள். படம் அத்தனை நீளம்! ஆனாலும் கண்ணிமைக்க முடியாது! நாற்பதாண்டுகளாக மனத்திரையில் திரும்பத் திரும்ப ஓடிய படம். இப்போது மீண்டும் பார்க்க, அமெரிக்கக் கேந்திரம் உதவியது. அப்போது ஒரு காட்சி கூட இதயத்தில் மங்கிப் போய்விடவில்லை என்று உறுதிப்பட்டது. படத்தை அறிமுகம் செய்து வைத்த அமெரிக்க அன்பர், ''தமிழ்ப் படங்களின் அளவுகோலைக் கொண்டு பார்த்தால் கூட இந்த ஆங்கிலப் படத்தின் நீளம் அதிகம் தான்'' என்றார். 'இந்த மாதிரி படம் எடுப்பதானால் இரண்டு இடைவேளைகளுடன் ஆறு மணி நேரம் கூட ஓடலாமே' என்று தோன்றியது. 'ஹூம்... அமரர் கல்கியின் சிவகாமியின் சபதத்தை மட்டும் இம்மாதிரி திரைப்படமாக்க முடியுமானால்....' என்று ஓர் ஏக்கப் பெருமூச்சும் எழுந்தது.

* லட்சுமி நரசிம்மன், வேலூர்.

? சிறந்த அரசியல் கட்சியாகத் தமது கட்சி தொடர்ந்து செயல்படும் என்று பண்ருட்டி ராமச்சந்திரன் அறிவித்து இருக்கிறாரே?

! ஓர் அரசியல் கட்சி சிறிய கட்சியாக இருந்தால் பாதகமில்லை; சிறந்த அரசியல் கட்சியாக இருக்க வேண்டும் என்பதுதான் முக்கியம். ஆட்சியைப் பிடிப்பது முக்கியமல்ல என்பதை உணர்ந்து, மக்களை வசீகரித்து வோட்டுப் பிடிக்கும் கொள்கைகளைத் தவிர்த்து, உண்மையான தொழில்—பொருளாதார வளர்ச்சிக்கும் மக்களின் சுபிட்சத்துக்கும் ஏற்ற கொள்கைகளை வகுத்துப் பிரசாரம் செய்து வந்தால் கட்சிக்கு மதிப்பிருக்கும். சொல்வதைச் சொல்லி விட்டேன்; இனி பண்ருட்டி பாடு, அவர் கட்சி பாடு!

* இரா. சண்முகசுந்தரம், கல்லிடைக்குறிச்சி.

? அரசு எவ்வளவு கொடுத்தாலும் ஊழியர்கள் திருப்தி அடைவதில்லையே?

! அதான் முதல்வர் சொல்லி விட்டாரே, 'குட்டக் குட்டக் குனிய மாட்டோம்; இதற்கு மேல் எங்களால் வளைய முடியாது' என்று...!

* சிவ. சண்முகம், தஞ்சை.

? இந்தி நடிகர் சத்ருகன் சின்ஹா அரசியலில் குதிக்கப் போகிறாராமே?

! அப்படித்தான் ரொம்ப வருஷமாகப் பேச்சு, பேச்சு; நிஜமாகவே குதித்து விட்டால் போச்சு! போச்சு!

* எஸ். கண்ணன், திருச்சி.

? சமீபத்தில் உங்களுக்கு எரிச்சலூட்டிய சம்பவம்?

! தங்களில் ஒருவரைப் பாதிக்கும் எந்த ஒரு விஷயத்துக்கும் கோபித்துக் கொண்டு, சாலைகளில் பஸ்களை நிறுத்தி, போக்குவரத்துக்கு இடைஞ்சல் செய்யும் அரசு பஸ் டிரைவர்களின் போக்கு, எனக்கு மட்டுமல்ல, பஸ் பயணிகள் அத்தனை பேருக்கும் எரிச்சலூட்டவே செய்யும். இதனால் பஸ் ஓட்டுனர் – நடத்துனர்களின் பிரச்னைகளை நாம் அலட்சியம் செய்வதாகாது. 'பரிகாரம் காண வழி இதுவல்ல' என்று தான் சொல்கிறோம்.

* என். பெனிட்டோகுமார், திருப்பூர்.

? மேல்நிலைப் பள்ளி மாணவர்களுக்கு இன்னும் பாடப் புத்தகங்கள் அனைத்தும் கிடைக்கவில்லையே...?

! தேர்தலில் ஒரு வாக்குறுதியாக இதைச்



* தி. மு. க. கதவுகள்....

## ஆலடி அருணாவுக்குத் தி.மு.க. கதவு திறக்கப்பட்டுள்ளதே?



* கான் வித்தி விண்ட்'



* ...திறந்தன.



* முதல்வரின் ஆசை



* சிறியதா? சிறந்ததா?



* ரிலயன்ஸ் அதிபர்.

சொல்லாதது ஒரு காரணமாக இருக்கலாம்!

*** எஸ். சுந்தர், பாளையங்கோட்டை.**

**? 'எதிர்க்கட்சியினர் நாடாளுமன்றத்தில் பிரச்னைகளைச் சந்திக்கப் பயந்து ஓடி விட்டனர்' என்று பிரதமர் பேசியிருக்கிறாரே?**

! தில்லியிலேயே இருந்தும் நாடாளுமன்றத்துக்கே வராத பிரதமர்தான் இப்படிப் பேசியிருக்கிறார்!

*** கே. மகேஷ், சங்கராபுரம்.**

**? 'இந்திய கிரிக்கெட், அணிக்கு ஸ்ரீகாந்த் காப்டனாக வேண்டும்' என்கிறாரே முதல்வர்?**

! யார் கண்டது. இப்போது டாப் கிரிக்கெட் வீரர்கள் பலருக்கு அளிக்கப்பட்டுள்ள தண்டனையைப் பார்த்தால் கருணாநிதியின் ஆசை நிறைவேறி விடும் போல்தான் தெரிகிறது!

*** ம. செந்தில்நாதன், மதுரை.**

**? 'பதுக்கல்காரர்களைக் காட்டிக் கொடுக்கப் போகிறேன்' என்கிறாரே பி. எச். பாண்டியன்?**

! இவர் ஒருவரைக் காட்டிக் கொடுத்தால் இவருக்குத் தெரியாமல் மேலும் பத்து பதுக்கல்காரர்கள் உருவாவார்கள். பதுக்கல், கள்ள மார்க்கெட், கறுப்புப் பணம் ஆகியவற்றால் ஆதாயமில்லை என்ற சூழ்நிலையை உருவாக்கக் கூடிய, சிறந்த பொருளாதார — தொழில் கொள்கைகளை அரசு கடைப்பிடிப்பதுதான் புத்திசாலித்தனம். அதற்கு முயற்சி மேற்கொள்ளட்டும் பாண்டியன்.

*** தாமல் கண்ணன், பெங்களூர். ***

**? அம்பானி, நுஸ்லி வாடியா விவகாரம் என்ன? அது ஸி. பி. ஐ. விசாரிப்பதால் எப்படி விவகாரமாகி விடும்?**

! அம்பானியின் ரிலயன்ஸ் நிறுவனங்கள் பல ஊழல்களைப் புரிந்திருப்பதாகக் குற்றச்சாட்டு. போட்டி மனப்பான்மை காரணமாக அந்த ஊழல்கள் வெளியே வர பாம்பே டையிங் நிறுவன அதிபர் வாடியாதான் பின்னணியில் இருந்து உதவியிருப்பதாக அம்பானி வட்டாரம் எண்ணி, கோபம் கொண்டிருக்கிறது. அம்பானி என்றே பெயர் கொண்ட அவரது தூரத்து உறவினர் ஒருவர், வாடியாவைக் கொலை செய்யத் திட்டம் போட்டதற்கு இதுவே காரணமாக இருக்கலாம். அம்பானி பிரதமரிடம் செல்வாக்கு பெற்றவர். அதனால் அவரது பொருளாதாரக் குற்றங்கள் கண்டுகொள்ளப்படுவதில்லை. மகாராஷ்டிரா முதல்வர் பவாருக்கு வாடியா நெருக்கமானவர். அதனால் கொலை முயற்சி கேஸில் மகாராஷ்டிர போலீஸ் அம்பானிக்கு எதிராகத் தீவிரமாகச் செயல்படும். எனவே மகாராஷ்டிர போலீஸிடமிருந்து பிரதமரின் ஆளுகைக்கு உட்பட்ட ஸி. பி. ஐ.க்குக் கேஸை மாற்ற முயற்சி நடக்கிறது. அம்பானியைக் காப்பாற்ற ஸி. பி. ஐ. விசாரணை வெறும் கண் துடைப்பாக மாறிவிடும். இதன் மூலம் ராஜீவ், அம்பானியின் நன்றியை மட்டுமின்றித் தேர்தலுக்கு ஏராளமான நிதி உதவியும் பெற முடியும். இவை அவ்வளவும் பரவலாகப் பேசப்படும் விஷயங்கள். உண்மை என்னவோ யாமறியோம். பராபரமே!

*** கமலா, புதுதில்லி.**

**? சத்தியவாணிமுத்து, ஆலடி அருணா ஆகியோருக்கு தி. மு. க. கதவுகள் திறக்கப்பட்டுள்ளனவே?**

! சத்தியவாணிமுத்துவின் நீண்ட நாள் மௌனம் அவருக்குக் கிடைத்த நுழைவுச் சீட்டு. ஆலடி அருணா போஃபோர்ஸ் விஷயத்தில் நாடாளுமன்ற ஆய்வுக் குழுவில் பங்கேற்று, கடுமையான மொழிகளில் மாற்றுக் கருத்துக்களைப் பதியச் செய்தது, அவருக்குக் கிடைத்த பாஸ்போர்ட். திக்கு தெரியாமல் அலைந்தவர்கள் எல்லாம் போய்ச் சேர வேண்டிய இடங்களுக்குப் போய்ச் சேர்ந்த பிறகு — தூசி அடங்கிய பிறகு — தி. மு. க. கதவுகள் திறக்கப்பட்டன என்பதால் ஓர் ஆறுதல்.

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

**தாமல் கண்ணன்,**
**219, முதல் நிலை,**
**இந்திரா நகர்,**
**பெங்களூர் — 560 038.**

நீங்க வடக்குகிழக்கு மாகாணத்திற்கு அதிகாரப் பகிர்வுன்னு சொல்லிக்கிட்டே இருங்க...!
நீங்களும் அமைதிப் படை வாபஸ்னு சொல்லிக்கிட்டே இருங்க!
பிப்ரவரி மாத இறுதியில் அமைதிப் படை வாபஸாகி விடும்!
ஜெயவரத்னே
பேச்சு வார்த்தை


நாடாளுமன்றத் தேர்தல் வெற்றி
எதிர்க் கட்சிகள்
பஞ்சாயத்து ராஜ் நேரு ரோஜ்கர் யோஜனா


லாரி விபத்து
ஜெயலலிதா-துரை முருகன் சம்பவம்
நம்ம தலைவர் எப்படியோ எல்லா விபத்துகளையும் தப்பிச்சுட்டு வர்றாரு!
ஜெயலலிதா ராஜினாமா கடிதம் விவகாரம்



# கல்கி

1989 ஆகஸ்ட் 20
மலர் 48 இதழ் 3
சுக்ல ஆவணி 4



## கிரிக்கெட் வீரர்களுக்குக் கொடிய தண்டனை!

போஃபோர்ஸ் பீரங்கிக் குண்டை விடப் பெரிய குண்டாகத் தூக்கிப் போட்டு விட்டது கிரிக்கெட் கண்ட்ரோல் போர்டு! வெங்சர்க்கார், கபில்தேவ், ரவிசாஸ்திரி, அஷாருத்தீன், கிரண்மூர், அருண்லால் ஆகிய ஆறு பேரும் இன்னும் ஓராண்டுக்கு எந்தவிதமான கிரிக்கெட் மாட்சிலும் கலந்து கொள்ளக் கூடாது என்று தடை உத்தரவு போட்டு விட்டது! இதுதவிர அவர்களுக்குத் தலா ரூ. 35,000 அபராதம் வேறு. வேறு ஆறு கிரிக்கெட் வீரர்களுக்குத் தலா ரூ. 15,000 அபராதம் மட்டும் விதிக்கப்பட்டுள்ளது. அபராதம் செலுத்தவில்லையானால் இவர்களும் விளையாட முடியாது! ஒரே குற்றத்தைச் செய்ததற்கு ஆறு பேருக்கு மிகக் கடுமையான தண்டனையையும் வேறு ஆறு பேருக்குக் குறைந்த தண்டனையும் விதிக்கக் காரணம், முதல் ஆறு பேரும் அனுபவஸ்தர்கள், விஷயம் தெரிந்தவர்கள் என்கிறது கிரிக்கெட் கண்ட்ரோல் போர்டு.

கிரிக்கெட் கண்ட்ரோல் போர்டின் தீர்ப்பும் தண்டனையும் கிரிக்கெட் ரசிகர்களை ஒரு சோக இருளில் ஆழ்த்தி விட்டிருக்கிறது. இன்னும் ஓராண்டுக்கு ஆடப்படவிருக்கும் கிரிக்கெட் டல்லடிக்கும்; கிரிக்கெட் உலகமே சோபை இழக்கும்.

'கிரிக்கெட் ஆட்டக்காரர்கள் தங்களை ஏதோ கடவுள் போல நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்; தங்களை யாரும் தட்டிக் கேட்கவே முடியாது என்று எண்ணுகிறார்கள்; எனவே கட்டுப்பாடு இழந்து தாறுமாறாக நடந்து கொள்கிறார்கள்; ஆகவே, இந்தக் கடுமையான தண்டனை தேவைதான்' என்று சிலர் பேசுகிறார்கள்.

இன்னொரு பக்கம், 'அவர்கள் செய்தது தவறேயானாலும் இத்தனை கடுமையான தண்டனை தேவையா? இது எதிர்கால சாம்பியன்கள் உள்பட, ஒட்டு மொத்தமாக அனைத்துக் கிரிக்கெட் வீரர்களின் உற்சாகத்தையும் குறைத்து விடாதா?' என்று பலர் கேட்கிறார்கள்.

இந்த இரண்டு வாதங்களுக்கும் அப்பாற்பட்டதான ஒரு விஷயம் உண்டு. அதைக் கவனிப்போம். கிரிக்கெட் என்பதே கட்டுப்பாடுகள் நிரம்பிய ஓர் ஆட்டம்தான். அதை ஆடுவோருக்குச் சுத்த வீரமும் சுயக் கட்டுப்பாடும் அவசியத் தேவைகள். அம்பயர் அவுட் தராவிட்டால்கூட, தான் ஆட்டமிழந்ததாக உணர்ந்தால் பெவிலியனுக்குத் திரும்ப வேண்டிய உன்னதமான தார்மிக நெறிகளை உள்ளடக்கிய கனவான்களின் ஆட்டம் அது. எனவே, கட்டுப்பாடு இழந்து கிரிக்கெட் வீரர் யாரும் நடந்து கொள்ளக் கூடாது என்பதில் இரண்டாவது கருத்துக்கு இடமில்லை.

ஆனால் கட்டுப்பாடு என்பது எதில்? எந்த அளவுக்குக் கட்டுப்பாடு? என்பனவற்றைக் கவனிக்க வேண்டும். விளையாட்டு வீரர்கள் மாட்ச் ஆடிக் கொண்டே இருக்கும் போது, பத்திரிகைகளில் எழுதுவது சர்ச்சைகளைக் கிளப்பும், பிரச்னைகளைத் தோற்றுவிக்கும் என்பதால், அதில் கட்டுப்பாடு அமல்படுத்தலாம். ஆட்டக்காரர்கள் காப்டனுக்குப் பூரண ஒத்துழைப்புத் தரவேண்டும் என்பதில் கண்டிப்புக் காட்டலாம். நிறவெறி கொண்ட தென்னாப்பிரிக்காவுடன் கிரிக்கெட் மாட்ச் ஆடக் கூடாது என்பதில் கட்டாயக் கண்டிப்பு தேவைதான். ஆனால் அமெரிக்காவுக்கும், கனடாவுக்கும் போய், சில நற்பணிகளுக்கு உதவும் நோக்கில், அதிகாரபூர்வமற்ற சில மாட்சுகளை ஆடி, அங்குள்ள இந்தியர்களையும், இதர ஆசியர்களையும் மகிழ்விப்பதில் என்ன தவறு? இதிலென்ன கட்டுப்பாடு வேண்டிக் கிடக்கிறது? அப்படி ஆடும் போது இவர்கள் அதற்காகக் கொஞ்சம் பணம் வாங்கிக் கொண்டு திரும்பினால்தான் என்ன குடிமுழுகிப் போய்விடும்? இந்தியாவுக்கு ஆடவேண்டிய ஒரு கடமையைப் பூர்த்தி செய்யாமல் அவர்கள் இதில் ஈடுபட்டு விடவில்லையே? ஓய்வு காலத்தில்தானே போய் ஆடினார்கள்?

ஆட்சியைப் போலத்தான் விளையாட்டு நிர்வாகத்திலும் — சட்டதிட்டங்களும் கட்டுப்பாடுகளும் நியாயமான அளவில் இருக்க வேண்டும். அளவுக்கு மீறிய கட்டுப்பாடுகள், அவற்றை மீறி நடக்கவே தூண்டும். தேவையற்ற கட்டுப்பாடுகளைத் தளர்த்தி, விளையாட்டு வீரர்களைச் சுதந்திரமாக உலவ விடுவதே நல்லது. இல்லையெனில், விளையாட்டுத் துறையிலும் தொழிற்சங்க அரசியல் தோன்றும்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# இரு வித அனுகூலங்களுடன் உங்கள் குழந்தையைப் பள்ளிக்கு அனுப்புங்கள் !

## ருசி + ஊட்டச்சத்து கொண்ட பானி மிக்ஸ்.

ஆரோக்கிய வாழ்க்கைக்கு
ஊட்டச்சத்து மிகுந்த உணவு தேவை.
பானிமிக்ஸ் ஊட்டச்சத்து நிறைந்தது.
எனவே உங்கள் குழந்தைக்கு இதனைத்
தவறாமல் அன்றாடம் கொடுங்கள்.
இதில் சுவையான ஆப்பிள், பேரிச்சை,
திராட்சை, முந்திரியுடன், கோதுமை,
அரிசி மற்றும் சோளமும் அடங்கியது.
இவை அனைத்தும் குழந்தைக்குத்
தேவையான கூடுதல் சத்தை அளிக்க
வல்லது.

பானிமிக்ஸ் தயாரிக்க எளிது
சமைக்கத் தேவையில்லை.
தேவையான அளவை
கிண்ணத்தில்
போடவும். முன்னமே
கொதிக்க வைத்த
பாலைச் சேர்க்கவும்.
மிருதுவான பாரிட்ஜ்
கிடைக்க மெதுவாக கலக்கவும்.






வழங்குவோர் : க்ளிண்டியா லிமிடெட் ( முன்னாள் க்ளாக்ஸோ ) ஊட்டச்சத்து உணவுகளிலே நம்பிக்கைக்கு உகந்த பெயர்.

GL/3/89 TAM

# வெங்கட், விக்ரம், வினய்

இடதுகை பாட்ஸ்மனாகத்தான் விளையாட்டு அரங்கில் முதலில் நுழைந்தான் விக்ரம். தமிழ்நாடு ஜூனியர் அணிக்கு ஆடினான். கூடவே டென்னிஸும் ஆடிக்கொண்டிருந்தான். மெள்ள மெள்ள டென்னிஸிலேயே முழுக் கவனமும் திரும்பி விட்டது. சமீபத்தில் வெஸ்டர்ன் இந்தியா டென்னிஸ் போட்டியில் முதல் இடத்தைப் பெற்றுள்ளான்.

வெங்கட்டின் பிள்ளையாக இருந்து கொண்டு, கிரிக்கெட்டில் ஓரளவு பெயரும் சம்பாதித்த பிறகு இப்போது டென்னிஸில் முழு மூச்சுடன் இறங்கக் காரணம் என்ன?

''டென்னிஸ், சின்ன வயதிலேயே வேரூன்ற வேண்டிய ஆட்டம். உச்சியை அடைந்தாலும் அங்கே சில வருடங்கள் தான் தங்க முடியும். அதனால்தான் டென்னிஸில் இப்போது கவனம் செலுத்தி வருகிறேன். விரும்பினால் சில வருடங்கள் கழித்து மீண்டும் கிரிக்கெட் ஆடலாமே!'' என்றான் விக்ரம்.

விக்கிரமின் தம்பி வினய்க்கும் டென்னிஸ் உலகில் மிகப் பிரகாசமான எதிர்காலம் இருக்கிறது என்கிறார் தமிழகத்தில் டென்னிஸ் 'அதாரிட்டி' எனக் கருதப்படும் பி. எல். ரெட்டி. ''அகில இந்திய அளவில் இருவருமே மிகச் சிறப்பாக ஆடி வருகிறார்கள்'' என்கிறார்.

விக்கிரமுக்குப் பள்ளியில் (சிஷ்யா) படிப்பிலும் நல்ல பெயர். கம்ப்யூட்டர் இன்ஜினியராக வேண்டும் என்று விருப்பமாம். வினய் டாக்டராக ஆசைப்படுகிறான்.

அம்மா ரஞ்சனி அதிகாலை ஐந்து மணிக்கே இருவரையும் எழுப்பி விட்டுவிடுகிறார். எழுந்ததும் ஓட்டம், உடற்பயிற்சி என்று வரிசையாக அட்டவணைப்படி காரியங்கள் நடக்கின்றன. பள்ளி முடிந்ததும் டென்னிஸ் பயிற்சி. பிறகு ஹோம் ஒர்க். பொழுது சரியாக இருக்கிறது பையன்களுக்கு. சினிமா, டி. வி., போன்ற வழக்கமான கேளிக்கைகள் இல்லாதது குறையாகத் தோன்றவில்லை என்கிறார்கள்.

யோகாசனமும் ஆழ்நிலைத் தியானமும் விளையாடும் போது கவனம் சிதறிப் போகாமல், நிலைகுலையாமல் இருக்க உதவுகின்றன என்று விக்கிரம் சொன்ன போது முதிர்ச்சி முளை விடுவது தென்பட்டது.

துருதுருவென்று சுழலும் கண்கள் வினய்க்கு. இவனும் கிரிக்கெட்டில் இடது கை பாட்ஸ்மன். அண்ணாவின் ஆட்டத்தை விமர்சிப்பதுண்டாம். ஒரு முக்கியமான டென்னிஸ் போட்டியில் வினய் ஆடிக் கொண்டிருந்தபோது நடுவர் தவறாக அவனுக்கு ஒரு பாயின்ட் அளித்து விட்டாராம். வினய் ஆட்டத்தை நிறுத்திவிட்டு, தம்மை எதிர்த்து ஆடிக் கொண்டிருந்த சிறுவனுக்கே அந்த பாயின்ட் வழங்கப்பட வேண்டும் என்று வாதிட்டிருக்கிறான். 'கோர்ட்டில் ஒரு போதும் அழுகுணி அடிக்கக் கூடாது என்று என் அப்பா சொல்லியிருக்கிறார்' என்று அவன் துணிச்சலுடன் பேசிய போது நடுவர் அசந்து விட்டாராம்.

வெங்கட்ராகவனும் அவர் மனைவி ரஞ்சனியும் தமது குழந்தைகளை நிறையவே ஊக்குவிக்கின்றனர், என்றாலும் சிபாரிசு தேடிப் போவதில்லை.

— குண்டுமணி

படங்கள்: ஸ்ரீஹரி.



* வெங்கட் குடும்பம் — சென்னை அடையாறில் விளையாட்டு உபகரணங்கள் விற்கும் கடை வைத்துள்ளார், வெங்கட்.

# காவிரிக்கரைக் கால்வாய்களுக்குக் காரணமானவர்

ஒரு தொகுதியிலிருந்து தேர்தலுக்குப் போட்டியிடும் இருவர் ஒருவரை ஒருவர் வசைபாடுவதைக் கேட்டுத்தான் நமக்குப் பழக்கம். ஆனால் திருச்சிராப்பள்ளி தொகுதி ஒன்றிலிருந்து எம். எல். சி. தேர்தலுக்குப் போட்டியிட்ட இருவர், ஒரே காரில் சென்று பிரசாரம் செய்தார்கள்! அந்த இருவர் — காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த கே. வி. ஸ்ரீனிவாச ஐயங்காரும் ஜஸ்டிஸ் கட்சியைச் சேர்ந்த டி. எம். நாராயணசாமி பிள்ளையும். கே. வி. எஸ். அந்நாளைய ஃபியட் கார் ஒன்று வைத்திருந்தார். பெட்ரோல் செலவைப் பகிர்ந்து கொண்டு குறைப்பதற்காக, அவர் நாராயணசாமியையும் அதில் ஏற்றிக் கொண்டு பிரசாரம் செய்தார். தேர்தலில் கே. வி. எஸ். ஜெயித்து எம். எல். சி. ஆனார்!

நூறு வருடங்களுக்கு முன் கோடியாலம் வாசுதேவ ஐயங்காரின் ஒன்பது குழந்தைகளுள் ஒருவராகப் பிறந்தார் கே. வி. எஸ். தந்தை இளமையிலேயே காலமானதால், வாலிபப் பருவத்திலேயே இவர் குடும்பப் பொறுப்பைச் சுமக்க வேண்டியதாயிற்று. அண்ணா ரங்கசாமி சுதந்திர இயக்கத்தில் சேர்ந்துவிட, மருதூர் கிராமத்தின் கட்டாந்தரை பூமியை வளம் கொழிக்கும் கழனிகளாக மாற்றும் முயற்சியில் இறங்கினார் கே. வி. எஸ். இதை வெற்றிகரமாகச் செய்தபின் சுதந்திர இயக்கத்திலும் பங்கேற்றார்.

காவிரிக்கு இருபுறமும் கால்வாய்கள் அமைப்பது, கட்டளைக் கால்வாய் திட்டத்தை அமுல்படுத்துவது போன்ற பணிகளில் கே. வி. ஸ்ரீனிவாசன் காட்டிய முனைப்பு ராஜாஜியைக் கவர்ந்தது. அவரைத் தேர்தலுக்கு நிற்கச் சொல்லி ஊக்குவித்தார். எம். எல். சி. யான கே. வி. எஸ்., அடுத்த தேர்தல் நடக்கத் தாமதமானதால் பதவி துறந்து தமது நண்பர் டாக்டர் டி. எஸ். எஸ். ராஜனுக்கு மேலவையில் இடம் செய்து கொடுத்தார்.



விவசாயத்திலும் அரசியலிலும் மட்டுமின்றிக் கல்வித் துறையிலும் கே.வி.எஸ். ஸுக்கு நிறைய ஈடுபாடு. விவசாயிகளிடம் குழந்தைகளைப் படிக்க வைக்கச் சொல்லி அவர் வற்புறுத்திய அதே நேரத்தில் அவர்கள் தொழிலையும் மறந்து விடக் கூடாது என்று எச்சரிப்பார். ஸ்ரீரங்கத்தில் பெண்கள் பள்ளி ஒன்று துவங்கினார். திருச்சி நேஷனல் கல்லூரியின் நிர்வாகக் கவுன்சில் உறுப்பினராகி, பல புதிய துறைகளைத் துவங்கச் செய்தார்.

கோடியாலம் குடும்பம் வெகு ஆசாரமான குடும்பம். இருப்பினும் கே. வி. எஸ்ஸின் பார்வை விசாலமாக இருந்தது. வாரந்தோறும் அவர் வீடு தேடி வந்தவர்கள் திருச்சி செயின்ட் ஜோஸப்ஸ் கல்லூரியின் கிறிஸ்துவப் பாதிரியார்கள்! மகாத்மா காந்தி, நேருஜி, ராஜேந்திர பிரஸாத் போன்ற பெரும் தலைவர்களும் தெற்கே வரும்போதெல்லாம் தவறாமல் கோடியாலம் இல்லத்திற்கு விஜயம் செய்வார்கள்.

மருதூரை அடுத்து பெட்டவாய்த்தலையில் ஒரு சர்க்கரை ஆலை உள்ளது. இன்றும் இப்பகுதி வாழ் விவசாயிகளுக்கு உதவி வரும் இவ்வாலையை நிர்மாணித்ததில் கே. வி. எஸ். ஸுக்கு முக்கிய பங்கு உண்டு.

1967 — இல் கே.வி. ஸ்ரீனிவாச ஐயங்கார் காலமான போது மருதூர் — குளித்தலை — முசிறி பகுதி விவசாயிகள் திரண்டு வந்து, தங்கள் பகுதியில் ஒரு பசுமைப் புரட்சிக்கு வித்திட்ட பெரியவருக்கு அஞ்சலி செலுத்தினார்கள்.

— பிரபா சம்பத்.

# ரொம்ப இடம் கொடுக்காதே!

என்ன பாகி, மாட்டுப் பொண்ணு வந்தாளா?

ஆமாண்டீ ஜானா, இந்தா, ஸ்வீட் எடுத்துக்கோ...

இத பாரு மொதல்ல மருமகளுக்கு ரொம்ப இடம் கொடுத்துடாதே..!

ஏண்டி அப்படிச் சொல்றே?

அப்புறம் உன்னை மாட்டுப் பொண்ணு பைசாக்குக் கூட மதிக்கமாட்டா...

அடிப் பைத்தியமே, என் மருமகள் அந்த மாதிரி 'டைப்' இல்லே!

அவ்வளவு உறுதியா எப்படிச் சொல்றே...?

கல்யாணமாகி வந்த இந்த ஒரு வாரத்திலேயே அவளைப் புரிஞ்சுண்டேன்

டபுள் கிராஜுவேட் அவ படிப்புல மட்டுமில்லை, வாழ்க்கையிலும் கூடத்தான்!

அப்படியா?

வந்த அன்னிக்கே அவ பழகற விதம் வேலை செய்யற அழகு... என்ன அவ பெத்த தாயார் மாதிரி நெனச்சுகிட்டு என்கிட்டே எல்லாத்தையும் பேசறா. நானே அவகிட்டே இருந்து நெறைய தெரிஞ்சுகிட்டேன்.

இதெல்லாம் அவ எப்படி கத்துண்டாளாம்? வந்த புதுசுல இருக்கற குணம் போகப் போக மாறுமோ?

நிச்சயமா இல்லடி. அவளோட அன்பான குணத்துக்கெல்லாம் காரணம்...

'மங்கையர் மலர்' படிக்கறதுதானாம். அவளே சொன்னா. "நான் கல்லூரி மாணவியா இருந்தப்பவே அம்மா என்னை 'மங்கையர் மலர்' படிக்கச் சொல்லுவா. அதுலேருந்து நான் நிறைய கத்துகிட்டேன். ஒரு பொண்ணுக்கு வேண்டிய துணிவு, தன்னம்பிக்கை, அன்பு, எல்லாத்தையும் **மங்கையர் மலர்** சொல்லிக் கொடுக்கறதுன்னு சொல்லுவா..."



தந்தி இந்நேரத்தில் வந்திருக்கிறதே என்று எண்ணத்தூண்டியது என் உடல் அலுப்பு. மூன்று நாட்களாய் 'கேம்ப்'பில் அலைந்து அப்போதுதான் வீடு திரும்பியிருந்தேன். அப்படியே படுக்கையில் விழுந்தால் தேவலாமென்று இருந்தது. ''ஒரு வாய் சாப்பிட்டுவிட்டுத்தான் படுங்களேன்'' என்ற என் மனைவியிடம், இரண்டு டம்ளர் ரசம்சாதத்தைக்கரைத்துக்கொடுக்கும்படி சொல்லியபடி சற்று உட்காரலாமென்று போனேன்.... வாசலில் சைக்கிள் மணியை அடித்து ''மூர்த்தி யாருங்க,'' என்ற குரல் தொடர எதிர்பார்த்திருந்த தந்தியேதான் என்று ஊர்ஜிதமாயிற்று. அத்தை இறந்து விட்டாள்!

அத்தை! எண்பத்தெட்டு வருடங்களாக ஏழைமையை ருசித்தவள். ஆதரவில்லாத தன் ஒரே மகளான அறுபத்தைந்தைத் தாண்டிய மீனாட்சி அம்மாளோடு திருக்கடையூரில், அக்கம்பக்கத்து வீடுகளில் நாள் கிழமைகளில் சமையல் வேலைக்கு ஒத்தாசை செய்வதோடு, சொற்ப முதியோர் பென்ஷனோடு நாங்களீ எப்போதாவது அனுப்புகிற பணத்தை வைத்துக் கஷ்ட ஜீவனத்தையே கண்டவள்.

அத்தைக்குப் பாசம் அதிகம். எப்போதாவது பார்த்துவிட்டுப் போக வரும் சொந்தங்களைக் கண்டால் சந்தோஷம் தாங்காது. குடியிருந்த ஒட்டை உடைசலான வீட்டிலும், நசுங்கிய அலுமினியப் பாத்திரத்திலும் மட்டுமே அவள் ஏழைமை தெரியுமேயன்றி, நாம் வந்திருக்கிறோமே என்று அக்கம் பக்கத்தில் கடன் வாங்கிச் சமைக்கும் சமையல், அன்பையும் பாசத்தையும் பிழிந்த விருந்தாய் இருக்கும்.

# “பதறிண்டு வருவான்...”

இரண்டு வாரங்களுக்கு முன்புதான் படுத்த படுக்கையாய் இருப்பதாகத் தகவல் வர, அத்தையைப் பார்க்கப் போயிருந்தேன். மணிமாமா தான் அவர்களுக்கு ஒத்தாசையாக ஒருவார காலமாய்த் தங்கியிருந்தார். அறுபதைக்கடந்தவர். பொன்மலை ரயில்வே வொர்க்ஷாப்பில் ஃபோர் மேனாயிருந்து ரிடையரானவர். குடும்பக் கஷ்டத்தில் மகன் ரகுவைச் சரியாகப் படிக்க வைக்க முடியவில்லை. திருச்சியிலேயே அற்ப சம்பளத்தில் ஒரு மில்லில் சேர்த்திருந்தார். கல்யாண வயதிலிருந்த மகன், ‘உன்னைப் பிடி என்னைப் பிடி’ என்று பையன் சம்பளத்தில் அரைவயிறு கழுவ முடியாத நிலையில், நிரந்தர விருந்தாளியான ஆஸ்த்மாவை அவர் கவனிக்காது போனதால், அது அடிக்கடி கோபித்துக் கொண்டு தொல்லைப் படுத்தும்.

மணிமாமா பரோபகாரி. எங்களுக்குத் தூரத்து உறவினரென்றாலும் அவர்தான் அத்தைக்கு ஆறுதலாய் அடிக்கடி வந்து பார்த்துப் போகிறவர். அப்போதும் அப்படிதான் — ஒரு வார காலமாய் இருந்திருக்கிறார். நான் போனவுடன் சொன்னார் ‘‘அத்தை உடம்பு ரொம்ப மோசமாத்தான் இருக்குடா மூர்த்தி. எப்போன்னு சொல்ல முடியாது போலிருக்கு. அத்தையைக் கரையேத்திட்டுப் போயிடலாம்னுதான் காத்துண்டு இருக்கேன். நீ வந்ததுதான் வந்தாய், இரண்டு நாள் இருந்து பாத்துட்டே போவயாம். ராத்திரி நேரம் ஒண்ணு கடக்க ஒண்ணு ஆனா எனக்குக் கண்ணும் தெரியலே கடையும் தெரியலே.... ஆஸ்த்மா சனியன் வேறு படுத்தறது. நீ இருந்தா ஒத்தாசையா இருக்கும். இரண்டு நாள் பார்ப்போம், நிலைமை இப்படியே இருந்தா எதிர் வீட்டு சபேசன் கிட்டே தந்தி ஃபாரம் வாங்கி எழுதிக் குடுத்துட்டுப் போவோம்... தந்தி கிடைச்சதும் ‘சட்’டுனு கிளம்பி வந்துடலாம்’’ என்றார்.

மூன்று நாட்களும் அத்தையின் உடல் நிலை அப்படியே இருக்கவே அக்கம்பக்கத்தில் பார்த்துக் கொள்ளச் சொல்லிவிட்டு அரைமனதோடு மணிமாமா கிளம்ப நானும் திரும்பினேன்.

அப்போதிலிருந்தே தந்தியை எதிர்ப்பார்த்திருந்தவன் தான். இப்போது இரவில் வந்திருந்த தந்தியைக் கையில் வைத்துக் கொண்டு யோசித்தேன். புறப்பட வேண்டுமே என்று இருந்தது. இரண்டு நாளாய் ஆபீஸ் டூர் என்று அலைந்ததில் உடம்பு அக்கக்காக வலித்தது. மிகவும் சோர்வாய்ப் படுத்துக் கொள்ள மாட்டோமா எனக் கெஞ்சியது. ‘சட்’டெனக் கிளம்ப தூண்டிய எண்ணங்களை உடல் உபாதைகளும் சற்று சோம்பலும் சேர்ந்து எழவிடாமல் அழுத்தின.

கடிகாரத்தைப் பார்த்தேன். மணி ஒன்பது நாற்பது. மாடியிலிருந்து தெருவைப் பார்த்தேன். சில்லென்று ஊதக்காற்று உடலை நடுக்கியது. தூரத்தில் தெருநாயின் ஈனஸ்வரமான குரைப்பு. இப்போது கிளம்ப முடியுமா என்ன? எப்படியும் மணிமாமா வந்திருப்பார். ஒரு நாள் முன்பே கூட வந்திருக்கலாம்!

‘‘இப்படி அனாதரவா இருக்கிறவளுக்குச் செய்யற சமக்கிரியை ஒரு பெரிய யாகத்துக்குச் சமமானதுடா மூர்த்தி.’’

— எப்போதோ மணிமாமா சொன்னது ஞாபகம் வந்து வேதனை தந்தது. யோசிக்காமல் சிரமத்தோடு சிரமமாய்க் கிளம்பி விடலாமோ. எப்படியும் சேலம் வரை போய்விடலாம். அங்கிருந்து விருதாசலத்துக்கு பஸ் இருக்க வேண்டும். ஆத்தூரிலிருந்து விருத்தாசலத்திற்குச் செல்லும் குண்டும் குழியுமான சாலையில் பஸ் தூக்கிப் போடுவதை நினைத்துக் கொண்டு மனம் சற்றுப் பின் வாங்கியது.

சரி, இங்கிருந்து பாண்டி மார்க்கமாக மாயவரம் செல்ல பஸ் இருக்குமா எனப் பார்க்க, திருவள்ளுவர் அட்டவணையைத் தேட ஆபீஸ் ‘டூர்’ பையைத் திறந்தேன். அட அப்போதுதான் கண்ணுக்கு அந்த ‘பேங்க் டிராஃப்ட்’ பட்டது. ஆம், இதை எப்படி மறந்து போனோம்! நாளை பட்டுவாடா செய்ய தலைமை ஆபீசிலிருந்து கொண்டு வந்திருந்த ஆபீஸ் ஊழியர்களுக்கான காசோலை. நாளையே பேங்கில் மாற்றிப் பட்டுவாடா செய்யாவிடில் பிரச்னைகள் வரலாம்.

அப்படி அவசர ஆபத்திற்குக் கையெழுத்தைப் போட்டுப் பக்கத்துத் தெருவிலுள்ள கிளார்க் நாகராஜனிடம் கொடுத்து விட்டுக் கூட கிளம்பலாமென்று மனத்தின் ஒரு பாதி சொல்ல, ‘பண விவகாரம் ஏதாவது எக்குத் தப்பாய் ஆகிவிட்டால் சிக்கலில் மாட்டிவிடும் என்று மறு பாதி சாமர்த்தியமாக ஓங்கி அடக்கியது.

மீனாட்சி அம்மாள் ஒத்தாசைக்கு ஆளில்லாமல் அவஸ்தைப் படுவார்களே என்ற கவலை வாட்டினாலும், உடனே கிளம்ப ஆயத்தமில்லாத உடம்பின் சிரமம் சின்ன சந்தர்ப்பங்களைப் பூதாகாரமாக்கிக் குழப்

அகிலா கார்த்திகேயன்

பியது.

"இப்படி ராத்திரி பத்துமணிக்குத் தந்தி வந்திருக்க வேண்டாம்" என்று எரிச்சல் பட்டேன்.

"ஏண்டி, நான் இப்படிக் குழம்பிண்டிருக்கேன்.... பேசாம இருக்கியே... நான் எப்ப கிளம்பலாம்னு சொல்லேன்" என்று இனம்புரியாத கோபத்தோடு மனைவியிடமிருந்து பதிலை எதிர்பார்த்தேன். ஏதாவது சாதகமான பதில் வருமா என்று காத்திருந்தேன். பேச்சைக் காணோம்.

"கேக்கறது காதுல விழலையா? எங்கேடி போய்த் தொலைஞ்சே" என்று கத்தியபின் பாத்ரூம் பக்கத்திலிருந்து வந்தவள், "ஏன் கத்தறீங்க... சித்தே தள்ளிப் போங்க" என்றபடி ஹாலின் மூலையில் சென்று உட்கார்ந்தாள். சரி நீங்க கிளம்பறதுன்னா கிளம்புங்கோ.... நாளை ஒருநாள் பங்கஜம் மாமியை வரச் சொல்லி, குழந்தைகளுக்கும் எனக்குமா ஏதாவது செஞ்சுக்கறேன்," என்றாள்.

'போதாததற்கு இது வேறா' என்று எண்ணினேன். நாளை பங்கஜம் மாமி வரும் வரை குழந்தைகள் காப்பி டிபன் என்று எங்கு போவார்களென்ற கவலை பிடித்துக் கொண்டது. எட்டரைக்கு ஸ்கூல் பஸ் வேறு வந்து நிற்பானே? குழந்தைகள் என்ன செய்யும், பாவம்? இவள் எப்படியோ சமாளித்துக் கொள்வாளென்று தோன்றினாலும், கிளம்ப இயலாமைக்குச் சாதகமான காரணம் கிடைத்தாற் போல ஓர் அல்பமான ஆறுதலோடு நாளைக் காலை கிளம்பலாமென்று தீர்மானித்தேன்.

"ஏன் கிளம்பலையான்னா?" என்றவளிடம்.

"இத்தனையும் வைச்சுண்டு எப்படிக் கிளம்பறது? விடிஞ்சுதான் கிளம்பணும்" என்று மேலாக அலுத்துக் கொண்டு, அயர்ந்து தூங்கிப் போனேன்.

**வி**டிகாலை, குற்ற உணர்வு விஸ்வரூபமெடுத்து ஆட்ட, நாலு மணிக்கே எழுந்து, நாகராஜன் வீட்டுக் கதவைத் தட்டி அவரிடம் டிராஃப்ட்டை ஒப்படைத்துவிட்டு, பங்கஜம் மாமியையும் கையோடு அழைத்து வந்து வீட்டில் விட்டுவிட்டு பஸ் நிலையம் நோக்கிப் பறந்தேன்.

முக்கியமான நேரத்தைத் தவற விட்டு விட்டதில் மனச்சாட்சி இடித்துக் கொண்டே இருக்க, தொடர்ச்சியாக பஸ் கிடைத்த போதும் திருக்கடையூர் சேரும் போது மத்யம் மூணாகிவிட்டது. எல்லாம் முடிந்திருக்குமோ என்னவோ என்று பரபரப்புடன் சன்னதித் தெருவை அடைந்தேன்.

தூரத்திலிருந்தே வீட்டைப் பார்த்தபடி ஓட்டமும் நடையுமாய் நெருங்கினேன். ஆட்கள் நடமாட்டமோ, கிரியைகள் நடப்பதற்கான அறிகுறிகளோ வீட்டின் முகப்பில் தென்படவில்லை. எல்லாமே முடிந்திருக்குமோ என எண்ணியபடி சென்றவன்,









கையில் ஈர வேஷ்டியை உதறியபடி மணி மாமா வெளியே வருவதைப் பார்த்தேன். அப்போதுதான் குளித்ததற்கு அடையாள மாக வழுக்கைத்தலையில் நீர் முத்துக்கள். வேஷ்டியைக் கொசுவி உதறியபடி திரும் பியவர் நான் வருவதைக் கவனித்து விட் டார்.

செருமியபடி பூஞ்சையான குரலில் பேசி னார். ''மூர்த்தி அத்தை போய்ச் சேர்ந்தாச் சப்பா. எனக்கு ராத்திரி பத்து மணிக்குத் தான் தந்தி கிடைச்சது. நேத்திக்குன்னு பார்த்து ரகுவிற்கு நைட் ஷிஃப்ட். அவன் வீட்டிலே இல்லே. எனக்கா மூச்சு திணறிண்டு ஆஸ்த்மா அவஸ்தை. மாத்தி ரையை விழுங்கித் தூக்கம் வராம புரண் டுண்டு இருந்தேன். அப்பதான் என் பொண்ணு எழுப்பித் தந்தி வந்திருக் குன்னா. உடனே கிளம்பலாம்னா, கையிலே பைசா காசு இல்லாம இருந்தது. சரி தயங் கிண்டே இருந்தா நேரத்துக்குப் போக முடி யாதுன்னு பக்கத்து வீட்டுச் செட்டியாரைப் போய் எழுப்பினேன். 'என்னய்யா தூக்கத் திலே எழுப்பித் தொந்தரவு பண்றே'ன்னு முதல்ல வள்ளு விழுந்தாலும், விஷயத்தைச் சொன்னவுடன் பணத்தைத் தூக்கிக் கொடுத்து 'எப்படி ஆஸ்த்மா தொல்லை யோட இந்த இருட்டிலே போவீர்'னு தன் பையனை விட்டு ஸ்டேஷன் வரை சைக் கிளில் கொண்டு விட்டு விட்டு வரும்படி சொன்னார். மாலாவைப் பத்திரமாக இருக்கச் சொல்லிட்டுக் கிளம்பினேன்.

''தெய்வாதீனமா பன்னிரண்டு மணி ரயில் கிடைச்சு, மாயவரம் வந்து, அங்கே விருந்து பஸ்ஸைப் பிடிச்சு, விடியறத்துக்கு முன்னாடி இங்கு வந்து சேர்ந்துட்டேன். மீனாட்சி பாவம் ஒண்டியா கஷ்டப்படாம ஊர் மனுஷால்லாம் ஒத்தாசை பண்ணி யிருக்கா. இருந்தாலும் நம்ப மனுஷான்னு இருந்தாதானே ஒரு தெம்பு. ஏதோ ஆண்ட வன்தாம்பா என்னை அவஸ்தைப்படுத் தாமல் கொண்டு சேர்த்தான்....

''பாவம் நீ ஒரு கோடியில் இருக்கிறவன். உனக்குத் தந்தி எப்ப கிடைச்சுதோ என்ன வோ.... ஓடிவந்திருக்கே.... மீனாட்சிக்கு ஆறுதலாய்த் துக்கம் விசாரிச்சுட்டுக் குளிக் கப்போ.... களைப்பா இருக்கும்'' என்றார்.

உறுத்தலோடு உள்ளே நுழைந்தேன். தாவாரத்தைக் கழுவிவிட்டபடி இருந்த மீனாட்சி அம்மாள் நிமிர்ந்து ''வந்துட்ட யாடா மூர்த்தி.... அத்தை காலம் முடிஞ்சு போச்சுடா... மூச்சுக்கு மூச்சு 'நான் போயிட் டாலும் எல்லோரும் வந்து சேர்ற மட்டும் எடுத்துடாதீங்கோ.... மூர்த்தி எல்லாம் தூரத்திலிருந்து வர்றவன்... பதறிண்டு வரு வான் முகமுழி பார்க்காம போச்சேன்னு வருத்தப்படப்போறான்'ன்னு புலம்பிண்டே இருந்தா. சன்னதி தெருவானதாலே வைச் சுண்டு இருக்க முடியலேடா மூர்த்தி'' என் றாள் குரல் தழுதழுக்க.

பீறிட்டுக் கொண்டு வந்த அழுகையை என்னால் அடக்கமுடியவில்லை.

# ஸ்ரீபெட் 'DREAMFLOWER'

**எங்கே வேண்டுமானாலும் எடுத்துச்
செல்லக்கூடிய தண்ணீர் பாட்டில்கள்.**



உங்களுக்குத் தேவையான, சுத்தமான குடிநீரை
நீங்கள் போகுமிடமெல்லாம் எடுத்துச்
செல்லலாம். உங்கள் கைப்பைகளுக்குள் வைத்துக்
கொள்ளக்கூடிய, அழகிய வடிவமுள்ள
பாட்டில்கள். கைக்கு அடக்கமான, கசிவில்லாத,
அரை லிட்டர் கொள்ளக்கூடிய (ட்ரீம்ஃப்ளவர்)
பாட்டில்கள் வெளியிடங்களுக்கு எடுத்துச்
செல்வதற்கு ஏற்றவை.

ஸ்ரீபெட் பாட்டில்களும் ஜாடிகளும்
கண்ணாடிபோல உள்ளேயிருப்பதை
பளிச்சென்று காண்பிப்பவை.
உடையாதவை. உணவுப் பொருட்களைப்
பத்திரப்படுத்துவதற்கு ஏற்ற தகுதியும் தரமும்
வாய்ந்தவை. நெடியற்றவை.
கனமில்லாதவை. உபயோகிக்க
வசதியானவை.

60 டிகிரி செண்டிகிரேட் வரை
உஷ்ணத்தைத் தாங்கக்கூடியவை.




பெட் இண்டஸ்டிரியல் கன்ஸ்யூமர்
பாக்கேஜ் பிரைவேட் லிமிடெட்,
3வது மாடி, மூகாம்பிகா
காம்பிளெக்ஸ்,
4, லேடி தேசிகாச்சாரி சாலை,
மயிலாப்பூர், சென்னை - 600 004.
போன்: 73768/74960/73038.



ADWAVE/PET/3822 TAM A




பிரதமர் வருகை பற்றிக் கிராமத்தில் பத்து நாட்களாய்ப் பேச்சு. செல்லத்தாயிக்கு ஆச்சர்யமாக இருந்தது. மாரியம்மன் பூச்சாட்டு மறுபடியும் வந்துவிட்டது போலிருந்தது. மாரியம்மன் சாட்டுன்னா தலைக்குத் தலை வரி கொடுக்கணும். வரி கொடுக்காத திருவிழா மாதிரி இது. செலவு பண்ண யார் யாரோ. பத்து நாட்கள் வேடிக்கை இன்னமும் தீரவில்லை... பொழுது போகக் கொஞ்சம் வேடிக்கை பார்க்கலாம் என்றிருந்தது.

பிரதமரைச் செல்லத்தாயி பஞ்சாயத்து போர்டு ஆபீஸ் டி. வி. யில் பலதரம் பார்த்திருக்கிறாள். ''என்ன நிறம்... என்ன அழகு'' என்று வியந்திருக்கிறாள். கண்டினால் இரத்தம் வரும் நிறம். ஆரஞ்சுப் பழச் சருமம். டி. வி. யில் பார்க்காத நாளில்லை. டி. வி. யில் காட்டும்போது யார் என்று அவளுக்கு முன்பெல்லாம் தெரியவில்லை. கிருஷ்ணவேணி — பஞ்சாயத்து போர்டு பள்ளியில் எட்டாவது படிப்பவள் — ஒருநாள் சொன்னாள் — அவர்தான் பிரதமர் என்று. அப்போதிலிருந்து டி.வியைப் பார்க்கிற போது பிரதமர் வந்தால், செல்லத்தாயி சட்டென அடையாளம் கண்டு கொள்வாள். ''அய்... பிரதமர்'' என்று முணுமுணுத்துக் கொள்வாள். பிரதமர் இன்னாரின் மகன் என்பதை அறிந்தபின் அவளுக்கு இன்னும்

# சுப்ரபாரதிமணியன்

சந்தோஷமாகவே இருந்தது. என்ன பிறப்பு, வளர்ப்பு, செல்வச் செழிப்பு, உயர் குடி வகை என்று ஆச்சர்யம் கொண்டிருக்கிறாள். அப்படிப்பட்ட பிரதமர் அவளின் கிராமத்திற்கு வரப்போகிறார். அவளின் குடிசை உள்ள தெருவுக்கு வரப் போகிறார். ஏதாவது பேசினாலும் பேசுவார். பதில் சொல்ல வேண்டும் என்று உள்ளூர்ப் பெரியவர்கள் சொல்லியிருந்தார்கள்.

எளச்சி பாளையத்தில் ஹெலிகாப்டரில் வந்து இறங்குவாராம். பல ஹெலிகாப்டர்கள் ஊர் மேல் சமீபமாய்ப் பறக்கின்றன — புழுதி பரப்பி.'புஷ்பக விமானமாய், சப்த மெழுப்பாமல், சினிமாவில் தேவர்கள் வரும் வாகனங்கள் போன்று எதுவும் அவருக்கு இல்லையா?' என்று செல்லத்தாயியும் நினைத்துப் பார்த்திருக்கிறாள். ''அந்த மவராசனுக்குத் தெரியாததா, நமக்குத் தெரியப் போகுது... வரட்டும்...''

இரண்டு நாட்கள் முன் ஒத்திகை மாதிரி எல்லாம் நடந்தது. எளச்சி பாளையத்தில் புழுதி பரப்பி ஹெலிகாப்டர் ஒன்று வந்தது. போலீஸும், உயர் அதிகாரிகளும் வந்தனர். பிரதமர் போன்று ஒருவர் வந்தார். அவர் நடக்கும் தெருவில் நடந்தார். அவர் எங்கெல்லாம் நிற்பார், பேசுவார் என்று கணக்கிட்டு நின்றார்; பேசினார். எல்லாம் சரியாகத்தான் இருக்கிறது என்று சந்தோஷப் பட்டுப் போனார்.

''செல்லத்தாயி... பிரதமர் இந்தத் தெருவிலே வரப் போறார். யார் வீட்டுக்கு வேணா போவார். உங்கிட்டே வந்து ஏதாச்சும் கேட்டா சரியா, மரியாதையா பதில் சொல்லணும்...''

''சரிங்க... ஆனா அந்த மவராசன் எந்த பாஷையிலே பேசுவார். டீ. வி. யிலே அவர் பேசற பாஷை என்ன...?''

''அவர் என்ன பாஷை பேசினாலும், அதைத் தமிழிலே சொல்ல ஆளுங்க இருப்பாங்க... சரியா பதில் சொல்லு...''

''சரிங்க... சட்டுன்னு வூட்டுக்குள்ளே பூந்து சாப்பாடு சாப்பிடற மாதிரியெல்லாம் டீ. வி. யிலே காட்டறாங்களே...?''

''ஆமா... எதுக்கும் கோழிக் கொழம்பு வெச்சு வை. தயாரா!''



''நான் எங்கேங்க போவேன் கோழிக்கு — மாசக் கடைசியிலே...?'' — சுற்றி இருந்தவர்கள் சிரித்தார்கள்.

''சை... சும்மா கெட.... உன் வீட்டிலே வந்து கோழிக் கொழம்பு திங்கறதுக்கு அவருக்கு நேரமெல்லாம் இருக்கா...!''

—இதைச் சொல்லவந்தவர்களை நினைக்க நினைக்கப் பயமெடுத்தது அவளுக்கு. எவ்வளவு போலீஸ்காரர்கள், எவ்வளவு திடமான மனிதர்கள். ஒரு மனிதனைச் சுற்றி இவ்வளவுபேர்களா?இன்றேஇப்படியென்றால் நிஜ மனிதர் வரும் நாளில் எப்படியிருக்கும்? தலை சுற்றும் அளவுக்கு இருந்தது.

எளச்சிபாளையத்திற்கு அந்தப் புறம் ஏதோ தொழிற்சாலை வரப்போவதாக எல்லோரும் பேசிக் கொள்வது செல்லத்தாயிக்குத் தெரியும். ஒரு நாள் தன் மகன் பொன்னுரங்கத்திடம் கூடச் சொன்னாள்:

''ஏண்டா... எளச்சி பாளையத்திலே ஏதோ பெரிசா தொழிற்சாலை வரப் போகுதாம். குண்டு, வெடி

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் ரூ.375/- மூன்றாவது பரிசு பெறும் கதை-1

யெல்லாம் பண்ணுவாங்களாம்... நீயும் போய்ச் சேரேன்... எத்தனை நாளைக்கு மில்லுலே எட்டு ரூபா சம்பளத்துக்கு அலைவே. ஏதோ சர்க்காரு தொழிற் சாலைங்கறாங்க..."

"அம்மா... அது பேக்டரியில்லே... அணு உலை... அணுசக்தி சம்பந்தமானது..."

"என்ன எளவோ...?"

"நிறைய வெடிகுண்டு மாதிரி என்னென்னமோ செய்வாங்க. ஒடம்புக்கு ஆகாதாமா... மெல்ல மெல்ல சாவு வரும். பக்கத்திலிருக்கிறவங்களையும் விடாதாமா... காச நோய் மாதிரி ஆளை அரிச்சுக் கொன்னு போடும். பொறக்கிற குழந்தைங்க கண்ணு இல்லாமே, கால்கை இல்லாமே பொறக்கும். மூளை வளர்ச்சி இருக்காதுன்னு நிறையச் சொல்றாங்க..."

"அப்புறம் அது எதுக்கு...?"

"விஞ்ஞானம்தான்...."

"என்ன விஞ்ஞானமோ...?"

"அதெல்லாம் இங்கே வந்தால் நாமெல்லாம் ஊரைக் காலி பண்ண வேண்டியிருக்கும். இப்பவே எளச்சி பாளையம் காலியாயிடுச்சுத் தெரியுமா...? நம்மளை எப்ப காலி பண்ணச் சொல்வாங்களோ...? அதனால தான் இதெல்லாம் வரக் கூடாதுன்னு போராட்டம் பண்றாங்க சில பேர். நம்ம செண்பகராமன் பையன் கூட அந்தப் போராட்டத்திலே முக்கியமான ஆளுதா.... அது சம்பந்தமான போராட்டத்திலதான் அவரை ஜெயில்லே போட்டுட்டாங்க. மூணு மாசத்துக்கு மேலாச்சு. இன்னும் வெளியே வுடலே... என்ன ஆகுமோ...?"

"அய்யோ... நம்மளையும் காலி பண்ணச் சொல்லுவாங்களா...?"

"சொல்லலாம். நாலு கிராமம் காலியாயிடுச்சு. நம்மதும் பண்ணணும்ணா பண்ணித்தான் ஆகணும். ஆனால் பணம் குடுப்பாங்க."

"பணம் குடுத்துக் காலி பண்ணச் சொன்னால் பண்ணிட்டாப் போச்சு. நமக்கென்ன இருக்கு பெரிசா? ஊடும், காலி எடமும்தானே... காசு கொஞ்சம் தாஸ்தியா கெடச்சா இந்த ஊரை வுட்டுட்டுப் போயிடலாம்... எத்தனை தலைமுறைக்கு இங்கே கஷ்டப்படறது...?"

"ஆனா... வழக்கமா விக்கறதை விட பாதிக்குக் கூட விலை தரமாட்டாங்க..."

"அப்புறம் என்னத்துக்கு:...! ஆமா வர்ற அந்த மகராசன் பணம் குடுக்கத்தான் வர்றாரா...?"

பொன்னுரங்கம் சிரித்துக் கொண்டான்.

"போராட்டமெல்லாம் நடக்குது பாரு... அது சம்பந்தமாதான்..."

"**அ**ம்மா. நல்ல தண்ணிக்குப் போகணும்னா போயிட்டு வந்துடு... நாளைக்குப் பிரதமர் வர்றப்போ எங்கேயும் நடமாட முடியாது. போனாத் திரும்பி வர்ற வரைக்கும் நிச்சயமிருக்காது."

பொன்னுரங்கம் செகண்ட் ஷிப்ட் வேலைக்குப் போகையில் சொல்லிவிட்டுப் போனான். குடிநீருக்குப் போகிறவர்களைக் கூடத் தடுத்து நிறுத்திச் சிரமம் தருவார்களா என்பது குறித்து ஆச்சரியமாகவே இருந்தது செல்லத்தாயிக்கு. இருந்தாலும் போய்விட்டு வந்து விடலாம் என்று இரு மண் குடங்களையும் எடுத்துக் கொண்டாள்.

உள்ளூர் கிராமத்தில் கிடைப்பது உப்புத் தண்ணீர்தான். அதை வாயில் வைக்க முடியாது. எளச்சி பாளையத்தில் சமீபமாய்த் தொழிற்சாலை வருகிறது என்று பிரமாதமாய்க் குடிதண்ணீர் வசதி. எளச்சி பாளையத்திற்குத்தான் நல்ல தண்ணிருக்கு — குடிநீருக்கு — செல்ல வேண்டும். இரண்டரை மைல்கள். ஐம்பதை எட்டிய தள்ளாத வயதில், மெல்ல மண் குடங்களுடன் நடந்து போய், கொண்டு வருவாள். அளந்து நிதானமாய்த்தான் மொண்டு தண்ணீர் தாகத்தைத் தணிக்க வேண்டும். கொஞ்சம் அதிகம் தாகம் என்று நிதானமில்லாமல் ஊற்றிக் கொண்டால் அவ்வளவுதான் — பக்கத்து வீட்டில் ஒரு சொம்பு கடன் கேட்க வேண்டும். பத்து ரூபாய் கடன் கேட்பது போல் ஒரு சொம்பு தண்ணீர் கேட்பது. எல்லோர்க்கும் அசௌகரியம்தான்.

நடக்க நடக்க நடை நீண்டு கொண்டே போவது போலிருந்தது. கால்கள் சலித்தன செல்லத்தாயிக்கு. மண்குடங்கள் எவ்வளவு

## அருள்வாக்கு



**ப**க்தி செலுத்துவதால் முக்தி கிடைத்து விடுமென்று சொன்னால் நாம் செலுத்தும் அந்தப் பக்தியே நேராக முக்தியைக் கொடுத்து விடுகிறது என்று அர்த்தமில்லை. நாம் செய்கிற எதுவுமே தானாக எந்தப் பலனையும் தருவதில்லை. பலன்களைத் தருகிற பலதாதாவாக ஈச்வரனே இருக்கிறான். அவன் தான் பாப புண்ணியம் பார்த்து எல்லாருக்கும் எல்லாப் பலனையும் கொடுக்கிறான். அவ்விதத்தில் நாம்

பண்ணுகிற பக்திக்குப் பலனாக அவன் பரமக்ருபை செய்து, ஞானத்தைத் தந்து, அந்த ஞானத்துக்குப் பலனாக மோக்ஷாநுபூதியைக் கொடுக்கிறான். ஆக, பலன் தருவது நாம் பண்ணும் பக்தியே அல்ல; அதற்குப் பிரதியாக ஈச்வரன் செய்யும் க்ருபைதான் பலனைத் தருவது.

பக்தி நிஜமானதாக இருந்தால் பக்தி பண்ணுகிறவன் அதற்கு ப்ரதியே எதிர்பார்க்க மாட்டான். ப்ரதி ப்ரயோஜனம் எதிர்பார்த்து விட்டால், அது வியாபாரம் தானேயொழிய பக்தி இல்லை என்றே பாகவதாதி நூல்களில் சொல்லியிருக்கிறது. இப்படி பக்தன் (ப்ரதி வேண்டாமல்) இருந்தாலும் இவனிடமிருந்து நிஜமான பக்தியைப் பெற்றுக் கொண்ட பகவானுக்கு மனசு கேட்குமா? அதனால் அவன் க்ருபை பண்ணத்தான் பண்ணுவான். ஞானத்தை அநுக்ரஹிக்கத்தான் செய்வான். பக்தனை ஸம்ஸாரத்திலிருந்து விடுவித்து மோக்ஷத்தில் சேர்க்கத் தான் செய்வான்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

கனம் கனக்கின்றன! எளச்சி பாளையத்துத் தண்ணீர்த் தொட்டி பக்கம் அலுத்து, அடைந்த போது, போலீஸ்காரர்கள் குடத்தில் என்ன என்று திரும்பத் திரும்பக் கேட்டனர். தண்ணீர் எடுக்க வந்ததைச் சொன்ன போது காதில் வாங்கிக் கொள்ளாமல், குடத்துக்குள் கைவிட்டு அலசியும் பார்த்தனர். குடத்தை வாங்கி அவசர கதியில் கீழே போட்டு உடைத்து விடுவார்களோ என்ற பயமும் இருந்தது அவளுக்கு. அவர்கள் குடங்களைக் கொடுத்த பின்னும், பயத்தால் குடங்கள் கைகளிலிருந்து நழுவி விடக் கூடாது என்று பதறினாள் செல்லத்தாயி. நல்லவேளை அப்படி எதுவும் நடக்கவில்லை. பயத்தால் நழுவி விழுந்துவிட்டால் பொன்னுரங்கம் சத்தம் போட்டாலும் போடுவான். தண்ணீர் பிடித்துக் கொண்டு இளம்புகையில் போலீஸ்காரர் ஒருவர் செல்லத்தாயியைப் பார்த்துச் சப்தம் போட்டார்: "நாளைக்கு இந்தப் பக்கம் வந்துராதே. எலும்பு கூட மிஞ்சாது. இந்த வயசிலே தண்ணி எடுக்க வந்தேன்னு சொன்னா யார் நம்புவா? போ, கெளம்!"

பயத்தால் கிடுகிடுவென்று கால்கள் நடுங்க நடந்தாள் செல்லத்தாயி.

கால்கள் வலியெடுத்தன. கால்களிலிருந்து வலி மெல்ல மெல்ல ஏறிக் கொண்டிருந்தது. ஹெலிகாப்டர் வந்து எறங்கற எடம்னு டாங்க் டாங்க்கா தண்ணியை நெலத்தில கொட்டறாங்களே. நமக்குக் குடிக்கத் தண்ணியே கெடைக்க மாட்டேங்குது. எத்தனை வருஷம் இந்தக் கஷ்டப் படறது? மூச்சு அடங்கற வயசும் வந்துடுச்சு. இன்னமும் இந்தத் தண்ணிக்குக் கஷ்டம் தீரலியே. இதிலே எளச்சி பாளையத்திலே வெடிகுண்டுத் தொழிற்சாலை எதுக்கு? இதிலே எதுக்கு நாமெல்லாம் எடத்தை வேறே காலி பண்ணித் தரணும்..." செல்லத்தாயியின் கோபம் ஆகாசம் அளவு வந்து நின்றது.

**வீ**தி சட்டெனப் பரபரப்பானது. மாரியம்மன் கோவில் முனையில் பிரதமர் நடந்து வந்து கொண்டிருந்தார். சுற்றிலும் செக்யூரிட்டி ஆட்கள். உள்ளூர் அரசியல் பிரமுகர்கள். திண்ணையின் மேல் ஏறி நின்று பார்த்தாள் செல்லத்தாயி. தெரியவில்லை. பரபரவென்று ஓடிவந்த யாரோ, பிரதமர் நாகமணி வீட்டில் இருப்பதாய்ச் சொன்னார். செல்லத்தாயி 'அப்படியா?' என்று சொல்லிக் கொள்கையில், இன்னொருவன், "என்ன இருக்கு.... சாப்பிட, குடேன்னு' கேழ்வரகுக் கஞ்சியை வாங்கிக் குடிச்சிகிட்டிருக்கிறாராம் ....." என்றான். – வியப்பாயிருந்தது செல்லத்தாயிக்கு. எதிர்த்த வீட்டு ஈஸ்வரி வந்தாள். நன்றாக அலங்காரம் பண்ணியிருந்தாள். நல்ல பட்டுப் புடைவையைக் கட்டியிருந்தாள். திருவிழாவுக்குப் புறப்படுகிறவள் போல், உறவுக் கல்யாணத்திற்குப் போகிறாற் போல் இருந்தது. செல்லத்தாயி கிழிந்த தன் புடைவையைப் பார்த்துக் கொண்டாள்.

"என்ன பட்டுப்புடைவையும், பௌடரும்..." செல்லத்தாயி மெல்லக் கேட்டாள்.

"பிரதம மந்திரி வர்றார், இல்லியா...? வந்து சட்டுன்னு நம்ம கூட பேசினா போட்டோ புடிப்பாங்க, சினிமா புடிப்பாங்க, டீ. வி. காரங்க புடிப்பாங்க. அப்புறம் டீ. வி. யிலே காட்டுவாங்க. கொஞ்சம் சுமாரா வாச்சும் நாம இருக்க வேண்டாமா....?"

செல்லத்தாயிக்குப் பொறி தட்டியது. குடிசையினுள் சென்றாள். உள்ளிருந்த மண் குடங்களை எடுத்து வந்து வெளியில் வைத்தாள். ஒரு குடம் நல்ல குடி தண்ணீர் மட்டும் இருந்தது. அது வீணாகி விடக் கூடாது. இன்றைக்கு எளச்சி பாளையம் போக முடியாது. இனி நாளைக்குத்தான். எனவே நாளை வரை ஜாக்கிரதையாக வைத்திருக்க வேண்டும். இன்னொரு மண் பாத்திரத்தை எடுத்து வந்து அந்த மண் குடத்தை மூடினாள். கடைசியில் பார்த்தால் ஏழெட்டு மண் பாத்திரங்களாகி விட்டன. மண் பாத்திரங்கள் முன்னால் உட்கார்ந்தாள்.

திடீரென வீதியில் பரபரப்பு அதிகமானது. ஜனங்கள் திமுதிமுவென்று ஓடி வந்தார்கள். பிரதமர் வந்து கொண்டிருந்தார். சுற்றிலும் செக்யூரிட்டிகளும், அரசியல் பிரமுகர்களும். கூச்சல் ஆரவாரம். எங்கே ஜனக் கூட்டம் தன் மண் பாத்திரங்களை

யெல்லாம் உடைத்து, துவம்சம் செய்து விட்டுப் போய் விடுமோ என்ற பயமும் இருந்தது செல்லத்தாயிக்கு. ஆனால் அவள் மண் பாத்திரங்களுடன் குடிசைக்கு முன் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தவர்களே சற்று ஒதுங்கி நடக்க ஆரம்பித்தனர். எல்லோரின் பார்வையிலும் அவள் பட ஆரம்பித்தாள்.

பிரதமர் கைகூப்பியபடி வந்தார். கையி லிருந்த பூமாலைகளையும், துண்டுகளை யும் மக்கள் மேல் எறிந்து கொண்டே வந் தார். செல்லத்தாயியின் குடிசை முன்பு ஜனத்திரள் அடைத்துக் கொண்டாலும், செல்லத்தாயி பானைகளின் முன்பு உட் கார்ந்திருப்பது தெரிந்தது. பிரதமர் குடி சையை நோக்கி வந்தார். கூட்டம் மெல்ல விலகி வழிவிட்டது. இப்போது செல்லத் தாயி அனைவரின் பார்வையிலும் பட்டாள்.

பிரதமர் அவள் முன் இருந்த மண் பாத் திரங்களை நோக்கி வந்தார். புருவங்களை உயர்த்தி என்ன என்பது போல் பார்த்தார். செக்யூரிட்டிகள் அவசரத்துடன் முண்டி யடித்தனர். பிரதமரின் சைகை அவர்களைக் கட்டுப்படுத்தியது. செல்லத்தாயியின் பக்கம் சென்றார்.

கைகளைக் குவித்து ''வணக்கம்'' என் றார். செல்லத்தாயி எழ முயன்று உட்கார்ந்த படியே ''வணக்கம்'' என்றாள்.

''எப்படி உள்ளீர்கள்? ரேஷன் ஒழுங் காய்க் கிடைக்கிறதா? அணுசக்தி ஆலை வந்தால் உங்களுக்குத் தொந்தரவு இல்லை யல்லவா?'' என்றார் நளினமான ஆங்கிலத் தில். அவரின் நிறத்தையும், உடல் வாகையும் பார்த்துக் கொண்டேயிருந்தாள் செல்லத் தாயி. அவசர அவசரமாய் ஒருவர் தமிழில் பிரதமர் சொன்னதைச் சொன்னார். செல் லத்தாயி எதுவும் பேசாமல் நின்றாள். மொழிபெயர்த்தவர் மீண்டும் கேள்வியைச் சொல்லி விட்டு, ''பதில் சொல்லம்மா'' என்றார். செல்லத்தாயி நிதானமாய்,

''எப்பவும் கஷ்டம்தா... கஷ்டமில்லாமெ மனுஷ ஜீவனம் இருக்க முடியுமா?'' என் றாள்.

மொழிபெயர்ப்பாளர், ''எல்லாம் கிடைக்கிறது: அணு ஆலை பற்றி ஆட்சே பணை எதுவுமில்லை என்கிறாள்'' என், றார்.

பிரதமர் லேசாய்ப் புன்னகை செய்தார்..

''இன்னிக்கு என்ன சாப்பாடு செய்தீர் கள்?''

பிரதமர் தன் கேள்வியை இந்திக்குத் திருப்பினார். மொழிபெயர்ப்பு நடந்தது.

''வழக்கமா கேழ்வரகுதா... நாளைக்கு ஞாயித்துக் கெழமை. கறியும் நெல்லு சோறும்...''

அவள் வீட்டில் கறிக் குழம்பும், அரிசி சாதமும், சாப்பிட அழைக்கிறாள் என்றார் மொழிபெயர்ப்பாளர். டி. வி. கேமராக்கள் இயங்கின. போட்டோக்கள் பளிச்சிட்டன.

''ரொம்பவும் நன்றி. இன்னொரு நாளைக் குச் சாப்பிடறேன்...''

''நாகமணி வீட்லே ஐயா சாப்பிட் டாரா?''

''ஆமா.. நான் யார் வீட்லியும் சாப்புடு வேன். சாமானியன்தானே.''

''தண்ணிக்குத்தாங்க கஷ்டம். தினமும் மூணு மைல் இந்த வயசிலே நடக்கறேன்...''

''என்ன சொல்றா அம்மா?''

வெற்றுக் குடத்தை எடுத்துக் காண்பித் தாள் செல்லத்தாயி... ஒரு சொம்பில் இருந்த தண்ணீரைக் காட்டினாள்.

''நீங்க அந்தம்மா வீட்லே தண்ணி யாச்சும் சாப்புடணும் என்கிறாள்'' என்றார் மொழி பெயர்ப்பாளர்.

''தண்ணி கஷ்டத்தைப் போக்காமெ பக்கத்து ஊர் வெடிகுண்டு தொழிற்சாலை யெல்லா....''

— செல்லத்தாயி உரத்த குரலில் சொன் னாள் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு.

யாரோ கட்டளையிட்டார்கள். டி. வி. இயங்குவது நின்றது.

''அவள் என்ன சொல்கிறாள்?'' பிரதமர் செல்லத்தாயியின் முகபாவத்தைப் பார்த்த படியே கேட்டார்.

''ஒன்றுமில்லை... இருக்கும் இடத்தைக் காலி செய்யச் சொல்வீர்களா... தலைமுறை தலைமுறையாய் இருந்த இடம் என்கிறாள்.''

சரேலென்று பலர் இடம்பெயர்ந்தனர். செல்லத்தாயியை மறித்தனர். பிரதமரிடம் யாரோ போகலாம் என்றனர். பிரதமரும் சரி என்று கிளம்பினார். செல்லத்தாயிக்கு முன்னால் வலிமையான மனிதர்கள் பலர் நின்று கொண்டிருந்தார்கள். கும்பல் பிரதமருக்குப் பின்னால் போனது. புழுதி அவள் மூச்சைச் சிரமப்படுத்தியது. சட்டென ஒரு பூட்ஸ் கால் தண்ணீர் இருந்த குடத்தை மிதித்தது. பளாரென்று குடம் உடைந்து நீர் தரையில் இறங்கியது.

கணவன்: இளைய தலைமுறை ரொம்ப முன்னேறிடுச்சுங்கிறியே, எப்படி?

மனைவி: அடுத்த வீட்டு மாமி காப்பிப் பொடிதான் இரவல் கேட்பாள். அவ ளுக்கு வாய்ச்சிருக்கும் புது மருமகள் 'அவர் அவசரமாப் புறப்பட வேண் டியிருக்கு! கொஞ்சம் டிகாக்ஷன் கேட்டு வாங்கிக் கொடுங்க'ன்னு விட்டுப் போறா.

— கரம்.



# பொன்னியின் செல்வன்

## அத்தியாயம் 20
## பறவைக் குஞ்சுகள்

கொடும்பாளூரிலிருந்து வானதி பழையாறை நகருக்கு வந்த புதிதில், சோழ நாட்டின் நீர் வளம் அவளை ஒரே ஆச்சரியக் கடலில் ஆழ்த்தியிருந்தது. கொடும்பாளூர்ப் பக்கத்தில் நதி ஒன்றும் கிடையாது. ஏரிகள்தான் உண்டு. மழை பெய்யும் காலங்களில் ஏரிகள் தண்ணீர் நிறைந்து ததும்பிக் கொண்டிருக்கும். கோடைக் காலத்தில் காய்ந்து விடும். இம்மாதிரி இரு கரைகளையும் தொட்டுக் கொண்டு தண்ணீர் ததும்பிச் சுழிகளும் சுழல்களுமாய் ஓடும் நதிகளும், வாய்க்கால்களும், கண்ணிகளும் அங்கே இல்லை. தாமரையும் செங்கழுநீரும் தழைத்துப் பூத்துக் கொழித்த தடாகங்களை வானதி பிறந்த ஊரில் பார்க்க முடியாது. இவற்றையெல்லாம் வானதி பார்த்துப் பார்த்து மெய் மறந்து உட்கார்ந்திருப்பாள். குளத்து மீனுக்குக் குடை பிடித்த தாமரை இலைகளின் மீது முத்துக்கள் போன்ற நீர்த்துளிகள் அங்கு மிங்கும் ஓடிக் களிப்பதைப் பார்த்து மகிழ்வாள். கமல மலர்களையும் அல்லிப் பூக்களையும் கருவண்டுகள் சுற்றிச் சுழன்று வந்து ஆடிப் பாடுவதைக் கண்டதும் பரவசமாகி விடுவாள். பொழுது போவதே தெரியாமல் போய் விடும்.

ஒரு சமயம் வானதியும் குந்தவையும் செம்பியன் மாதேவி அழைத்ததின் பேரில் திருநல்லம்*த்துக்குப் போயிருந்தார்கள். வசந்த மாளிகையில் தங்கியிருந்தார்கள். செம்பியன் மாதேவியும் குந்தவையும் அடிக்கடி சைவ சமய குரவர்களின் வரலாறுகளைப் பற்றியும், அவர்களுடைய பதிகங்களில் கனிந்து சொட்டும் பக்தி ரஸத்தைப் பற்றியும் பேசத் தொடங்கி விடுவார்கள். செம்பியன் மாதேவி, மேற்கெழுந்தருளிய தேவரான தம் அருமைக் கணவர் கண்டராதித்தருடன் தாம் க்ஷேத்திர யாத்திரை செய்த வரலாறுகளையும் சொல்லத் தொடங்கி விடுவார். அதையெல்லாம் கேட்டுக் கொண்டிருப்பதில் வானதிக்குச் சிரத்தை இருப்பதில்லை. அதைக் காட்டிலும் வசந்த மாளிகையையொட்டியிருந்த தோட்டங்களிலே சென்று பறவைகளின் இனிய கீதங்களைக் கேட்பதிலும், தடாகத்தில் பூத்துக் குலுங்கிய தாமரை மலர்களைச் சுற்றி வந்து கொண்

# அமரர் கல்கி

* இக் காலத்தில் திருநல்லத்துக்குக் கோனேரிராஜபுரம் என்று பெயர் வழங்குகிறது.

டிருந்த கருநீல வண்டுகளின் இன்ப ரீங்காரத்தைக் கேட்பதிலும் அவளுக்கு ஆர்வம் அதிகமாயிருந்தது. இன்னும் மாளிகையின் ஒரு பக்கமாகச் சென்று கொண்டிருந்த நதி வெள்ளம் சுழி போட்டுக் கொண்டு ஓடுவதையும் அந்தச் சுழிகளில் அழகிய செக்கச் சிவந்த கடம்ப மலர்கள் சுழன்று கொண்டிருப்பதையும் பார்க்க அவளுக்கு மிக்க ஆர்வம் இருந்தது. கொடும்பாளூர் பகுதிகளில் இம்மாதிரி மனோரம்யமான காட்சிகளைப் பார்க்க இயலாதல்லவா?


ரு நாள் மழவரையர் மகளாரும் இளைய பிராட்டி குந்தவையும் சுவாரஸ்யமாக ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். வானதி அவர்கள் அருகில் சென்றபோது இளைய பிராட்டி "வானதி! நீ தோட்டத்துக்குப் போ! சற்று நேரத்துக்கெல்லாம் நானும் வருகிறேன்!" என்றார். வானதி குதூகலத்துடன் துள்ளிக் குதித்து ஓடினாள். தோட்டத்தில் சற்று நேரம் சுற்றி அலைந்து விட்டுத் தாமரைக் குளக்கரைக்குச் சென்றாள். குளக்கரையில் வானை மறைத்துக் கொண்டு வளர்ந்திருந்த மரங்கள் பல இருந்தன. அவற்றில் நெடிதுயர்ந்து பல்கிப் பரவித் தழைத்திருந்த இலுப்பை மரம் ஒன்றிருந்தது. இலுப்பை மரம் பூக்கும் காலம் அது. அந்த மரத்தடியில் இலுப்பைப் பூக்கள் உதிர்ந்து பூமியை அடியோடு மறைத்துக் கொண்டிருந்தன. அவற்றின் நறுமணம் கம்மென்று வீசித் தோட்டம் முழுவதிலும் பரவியிருந்தது. அந்த மரத்தடியில் ஒரு பெரிய வேரின் பேரில் வானதி உட்கார்ந்தாள். அடிமரத்தில் சாய்ந்து கொண்டு மேலும் கீழும் நாலாபுறமும் பார்த்துக் கொண்டிருந்தாள். பறவை இனங்களின் இனிய கீதங்கள் அவளுடைய செவிகளில் அமுத வெள்ளமாகப் பாய்ந்து கொண்டிருந்தன. அவள் அந்த நாள்வரை அநுபவித்திராத இன்ப உணர்ச்சி அவள் இதயத்தில் தோன்றியது. அந்த உள்ளக் களிப்பு அடிக்கடி பொங்கித் ததும்பி அவள் மேனியெல்லாம் பரவியது. வாழ்க்கை இவ்வளவு ஆனந்த மயமாக இருக்கக் கூடும் என்று வானதி அன்று வரை கனவிலும் கருதியதில்லை.

அந்த மரத்தடியிலிருந்து பார்த்தால் சற்றுத் தூரத்தில் ஆற்று வெள்ளம் தெரிந்தது. அவ்வப்போது நதி ஓட்டத்தின் இனிய காட்சிகளையும் அவள் மரங்களின் இடைவெளி வழியாகப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

ஒருமுறை யாரோ ஒரு வாலிபன் ஆற்றில் நீந்திக் கொண்டிருப்பதும் தெரிந்தது. செந்நிற நீர்ப் பிரவாகத்தில் அவனுடைய பொன்னொளிர் மேனி பாதி தண்ணீரிலும் பாதி மேலேயும் மிதந்த வனப்பு மிக்க காட்சி அவள் உள்ளத்தைக் கவர்ந்தது. சீச்சீ! யாரோ இளம்பிள்ளை ஒருவனுடைய தோற்றத்தில் தனது கவனம் செல்வது என்ன அசட்டுத் தனம்? — நாணம், மடம் என்னும் இயல்புகளைத் தன் உடன் பிறந்த செல்வங்களாகக் கொண்டிருந்த வானதிக்கு அந்த எண்ணம் மிக்க கூச்சத்தை உண்டாக்கியது. அவளுடைய உள்ளக் கட்டுப்பாட்டையும் மீறிக் கண்கள் மீண்டும் இரண்டொரு தடவைகள் நதிப் பக்கம் சென்றன.

வானதிக்குத் தன் பேரில் கோபமே உண்டாயிற்று. அங்கிருந்து எழுந்து போய் விடலாமா என்று எண்ணினாள். அச்சமயம் வேறொரு நிகழ்ச்சி அவளுடைய உள்ளத்தைக் கவர்ந்தது.

அவள் அமர்ந்திருந்த இடத்துக்கு அருகாமையில், தலைக்கு மேலே பறவைக் குஞ்சுகளின் கூக்குரலைக் கேட்டு நிமிர்ந்து பார்த்தாள். அங்கே அவள் கண்ட காட்சி அவளுக்கு ஏக காலத்தில் பரிதாபத்தையும் திகிலையும் உண்டாக்கின.

ஒரு மரக் கிளையில் கவணை போலப் பிரிந்த இடத்தில் பட்சிக் கூடு ஒன்று இருந்தது. அதில் சில பறவைக் குஞ்சுகள் தலைகளை நீட்டிக் கொண்டிருந்தன. அவைதான் 'கிறீச்' 'கிறீச்' என்று மெல்லிய குரலில் சத்தமிட்டன. அந்தச் சத்தத்தில் பயமும், அபாய அறிவிப்பும், பரிதாபமான அடைக்கல விண்ணப்ப முறையீடும் கலந்திருந்தன. அவ்விதம் கலந்திருந்ததாக வானதியின் செவிகளில் ஒலித்தன. கூட்டுக்கு அருகில் மரக்கிளையில் ஒரு காட்டுப் பூனை ஏறிக் கொண்டிருந்தது. மெள்ள மெள்ள அது கூட்டை நெருங்கி வந்து கொண்டிருந்தது!

அதைப் பார்த்த வானதி "ஐயோ! ஐயோ!" என்று சத்தமிட்டாள். அடுத்த கணத்தில், "என்ன? என்ன?" என்று ஒரு குரல் கேட்டது. யாரோ விரைந்து ஓடி வரும் காலடிச் சத்தமும் கேட்டது. வானதி அந்தப் பக்கம் பார்த்தாள். சற்று முன் நதி வெள்ளத்தில் நீந்திக் கொண்டிருந்த வாலிபன்தான் கரையேறி ஓடிவந்து கொண்டிருந்தான் என்பதை அவள் அறிந்தாள்.

அதே சமயத்தில் எங்கிருந்தோ இரண்டு பெரிய பறவைகள் வந்து விட்டன. கூட்டைச் சுற்றி அவை கராபுராவென்று கத்திக் கொண்டு வட்டமிட்டன. அவை அக்குஞ்சுகளின் தாயும் தகப்பனுமாகவே இருக்க வேண்டும். குஞ்சுகளைக் காப்பாற்றுவதற்காகவே அவை அவ்விதம் அவசரமாக வந்திருக்க வேண்டும் என்பதை வானதி உணர்ந்தாள். இரண்டும் நீள மூக்குகள்

உள்ள பறவைகள். மரங் கொத்திப் பறவைகள் என்பவை இவைதான் போலும். ஒரு பறவை கூட்டைச் சுற்றி அதிகமாக வட்ட மிட்டது. இன்னொன்று பூனையை நெருங்கி அதை மூக்கினால் கொத்தித் தாக்கும் பாவனையுடன் சத்த மிட்டது! பூனையை அந்தப் பறவையினால் ஒன்றும் செய்துவிட முடியாது. பூனையின் வாயில் அகப்பட்டால் மறு கணம் அதன் வயிற்றுக்குள்ளேயே போய்விட வேண்டியதுதான். ஆயினும் தன் குஞ்சுகளைக் காப்பதற்காக அந்தப் பறவை அப்படித் தீரத்துடன் போராடியது. தாயையும் தகப்பனையும் இளம் பிராயத்திலேயே இழந்துவிட்ட வானதிக்கு அந்தக் காட்சி மிக்க மனக் கசிவை உண்டாக்கியது.

பூனை சற்றுச் சும்மா இருந்துவிட்டுத் திடீரென்று முன்னங் கால் ஒன்றைக் கூட்டின் பக்கம் நீட்டியது. பறவைக் குஞ்சுகள் இருந்த கூட்டின்ஒருமுனையையும்தொட்டுவிட்டது.

வானதி மறுபடியும் அலறினாள். இதற்குள் அந்த வாலிபன் நெருங்கி வந்து விட்டான். அவனை அருகில் பார்ப்பதற்கு வானதிக்கு மிக்க கூச்சமாயிருந்தது. மறுமொழி சொல்ல வரவில்லை. பேசுவதற்கு நா எழவில்லை. சமிக்ஞையினால் பட்சியின் கூட்டைச் சுட்டிக் காட்டினாள்.

அதுவரையில் அந்தப் பெண்ணுக்குத்தான் ஏதோ அபாயம் என்று எண்ணிக் கொண்டிருந்தான். வானதி சுட்டிக் காட்டிய இடத்தை அண்ணாந்து பார்த்தான். மறுபடியும் வானதியை நோக்கிப் புன்னகை புரிந்தான். அவனுடைய பார்வையும் புன்னகையும் வானதியின் நெஞ்சத்தை நெகிழச் செய்து, பறவைக் குஞ்சுகளின் நிலையைக் கூட மறந்து விடச் செய்தன.

ஆனால் வாலிபன் உடனே அங்கிருந்து விரைந்து ஓடி, மரக் கிளையில் பறவைக் கூடு இருந்த இடத்துக்கு நேர் கீழே சென்று நின்றான்.

காட்டுப் பூனையை அதட்டினான். அது கீழே குனிந்து பார்த்து உருமியது. "பொல்லாத பூனையாயிருக்கிறதே!" என்று சொல்லிக் கொண்டே தரையிலிருந்து ஒரு கல்லைப் பொறுக்கி வேகமாக விட்டெறிந்தான். கல் பூனையின் மீது படாமல் அதன் அருகில் மரக் கிளையைத் தாக்கியது. பூனை உடனே தாவி வேறு கிளையில் பாய்ந்து, அங்கிருந்து இன்னொரு அடர்ந்த மரத்துக்குச் சென்று, பின்னர் மறைந்து விட்டது.

ஆனால் இதற்குள் வேறொரு விபரீதம் நேர்ந்து விட்டது. பூனையின் ஒருகால் பறவைக் கூட்டின் முனையைப் பற்றி இழுத்ததல்லவா? அதனால் சிறிது ஆடிப்போயிருந்த கூடு, வாலிபனின் கல்லெறி மரக்



கிளையில் தாக்கிய வேகத்தினால் அதிகமாக நிலைகுலைந்தது. சிறிது சிறிதாக அந்தக் கூடு கிளையின் கப்பிலிருந்து நழுவியது. முழுதும் நழுவி விழுந்திருந்தால் காட்டுப் பூனை வாயிலிருந்து தப்பிய குஞ்சுகள் தரையில் விழுந்து மாண்டிருக்கும்! நல்லவேளையாகக் கூட்டின் ஒரு முனை கிளையைக் கவ்விக் கொண்டிருந்தது. கூடு அதில் இருந்த குஞ்சுகளுடன் கீழே தொங்கி ஊசலாடியது. குஞ்சுகளின் உயிரும் ஊசலாடின. மரங்கொத்திப் பறவைகள் முன்னைவிடப் பீதியுடன் அலறிக் கொண்டு குஞ்சுகள் இருந்த கூட்டைச் சுற்றிச் சுற்றி வந்தன. காற்று கொஞ்சம் வேகமாக அடித்தால் கூடு தரையில் விழுந்துவிடும். அவ்வளவு உயரத்திலிருந்து விழுந்தால் குஞ்சுகள் பிழைப்பது துர்லபந்தான்.

வாலிபன் ஒரு கண நேரம் யோசித்தான். முதலில் மரத்தின் மேல் தாவி ஏற அவன் எண்ணியதாகத் தோன்றியது. மறு கணத்தில் மனத்தை மாற்றிக் கொண்டதாகக் காணப்பட்டது.

வானதியைப் பார்த்து, "பெண்ணே! சற்று இங்கே வா! கூடு கீழே விழுந்தால் உன் சேலைத் தலைப்பினால் பிடித்துக் கொள்! இதோ நான் ஒரு நொடியில் திரும்பி வருகிறேன்!" என்று சொல்லி விட்டு ஓடினான்.

அவன் சொன்னபடியே மிகச் சொற்ப நேரத்தில் திரும்பி வந்தான். ஆனால் இப்போது அவன் நடந்து வரவில்லை. யானை மீது ஏறிக்கொண்டு வந்தான். வானதிக்கு அவன் என்ன செய்யப்போகிறான் என்பது ஒருவாறு தெரிந்து விட்டது. ஆகையால் அங்கிருந்து அப்பால் சென்றாள். அருகிலிருந்த தாமரைக் குளத்தின் படிக்கட்டை அடைந்தாள். சில படிகள் இறங்கி உட்கார்ந்து கொண்டு யானை மேல் வந்த வாலிபன் என்ன செய்கிறான் என்பதைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

யானை மரத்தடிக்கு வந்ததும் நின்றது. அதன் முதுகில் இருந்தபடி வாலிபன் பறவைக் கூட்டைக் கையினால் தாங்கி முன்னால் அது இருந்த கிளைப் பொந்திலே ஜாக்கிரதையாக வைத்தான். தாய்ப் பறவையும் தகப்பன் பறவையும் இப்போது முன்னைவிட அதிகமாகக் கூச்சலிட்டன.

ஆனால் அந்தக்கூச்சலில் இப்போதுகுதூகல த்வனி மேலிட்டிருப்பதாகத் தோன்றியது.

வாலிபன் பின்னர் திரும்பிச் சுற்றும் முற்றும் பார்த்தான். "பெண்ணே! எங்கே போனாய்?" என்று கூவினான். வானதி பெரிதும் நாணம் அடைந்து மௌனமாயிருந்தாள். வாலிபன் யானையின் மீதிலிருந்து கீழிறங்கினான். பின்னர் மறுபடியும் சுற்று முற்றும் பார்த்தான்.

வானதி மனத்தில் எதையோ நினைத்துக் கொண்டாள். அந்த நினைவு அவளுக்குப் பெரும் வேடிக்கையாயிருந்தது. அவளை அறியாமல் சிரிப்பு வந்தது. உரத்த சத்தத்துடன் கலகலவென்று சிரித்தாள்.

அதைக் கேட்டு விட்டு வாலிபன் குளத்தின் படிக்கட்டுக்கு வந்தான். வானதியைப் பார்த்து, "பெண்ணே! ஏன் சிரிக்கிறாய்? நீ இவ்வளவு பலமாகச் சிரிக்கும்படியாக இப்போது என்ன நேர்ந்து விட்டது?" என்றான்.

வாலிபனின்குரல் வானதியின் செவிகளில் விழுந்ததும் மறுபடியும் முன் போல் அவளுடைய நெஞ்சம் நெகிழ்ந்து பொங்கிற்று. கூச்சம் முன்னிலும் அதிகமாயிற்று. அவனை ஏறிட்டுப் பார்க்க முடியாதபடியால், அப்புறமும் இப்புறமும் பார்த்துக் கொண்டிருந்தாள்.




"பெண்ணே! ஏன் சிரித்தாய்? சொல்ல மாட்டாயா?" என்று மீண்டும் வாலிபன் கேட்டான்.

வானதி மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு, "ஒன்றுமில்லை. நீ பெரிய வீரனாயிருக்கிறாயே என்று எண்ணிச் சிரித்தேன். பூனையோடு சண்டை போடுவதற்கு யானையின் பேரில் வந்தாய் அல்லவா?" என்று கேட்டாள்.

அதைக் கேட்டு வாலிபனும் சிரித்தான்.

"பெண்ணே! அது பூனைதானா? நீ போட்ட கூக்குரலைக் கேட்டுப் புலியோ என்று பயந்து விட்டேன்!" என்று சொன்னான்.

வானதிக்கு இதற்குள் துணிவு வந்து விட்டது; அவளிடமிருந்த கூச்சமும் குறைந்து விட்டது.

"ஆகா! அப்படியா? புலிக் கொடி பறக்கும் சோழ நாட்டில் புலியைக் கண்டுதான் எதற்காகப் பயப்பட வேணும்? நீ பாண்டிய நாட்டானா?" என்றாள்.

அதைக் கேட்ட வாலிபனின் முகம் முன்னைக் காட்டிலும் சற்று அதிகமாக மலர்ச்சி அடைந்தது.

"பெண்ணே! நான் வேற்று நாட்டவன் அல்ல; இந்தச் சோழ நாட்டைச் சேர்ந்தவன் தான்! யானை மீது ஏறி வேறு போர்க் களங்களுக்கும் சென்றிருக்கிறேன். நீ யார்? எந்த ஊர்ப் பெண்? பெரிய வாயாடிப் பெண்ணாக இருக்கிறாய்?" என்றான்.

"யானைப் பாகா! மரியாதையாகப் பேசு! நான் யாராயிருந்தால் உனக்கு என்ன? எதற்காக அதைப் பற்றிக் கேட்கிறாய்?" என்றாள் வானதி.

"சரி, அப்படியானால் நான் கேட்கவில்லை. பெரிய இடத்துப் பெண்போலிருக்கிறது! போகிறேன்!" என்று சொல்லிவிட்டு அந்த வாலிபன் படியேறி மேலே போகலானான்.

வானதி மறுபடியும் விளையாட்டும் பரிகாசமும் தொனித்த குரலில், "யானைப் பாகா! யானைப் பாகா! என்னையும் உன் யானையின் மேல் ஏற்றிக் கொண்டு போகிறாயா?" என்றாள்.

"சரி; ஏற்றிக் கொண்டு போகிறேன், எனக்கு என்ன கூலி தருவாய்?" என்று கேட்டான் வாலிபன்.

"கூலியா? என் பெரியப்பாவிடம் சொல்லி உனக்குக் கொடும்பாளூர் அரண்மனையில் உத்தியோகம் வாங்கித் தருகிறேன். இல்லாவிட்டால், யானைப் படைக்குச் சேநாதிபதியாக்கச் செய்கிறேன்!" என்றாள் வானதி.

"ஓகோ! கொடும்பாளூர் இளவரசியா தாங்கள்?" என்றான் அந்த வாலிபன். இது வரையில் மலர்ந்திருந்த அவனது முகம் இப்போது சுருங்கியது. புன்னகை மறைந்தது. புருவங்கள் நெறிந்தன.

"ஏன்? கொடும்பாளூர் இளவரசி என்றால் அவ்வளவுமட்டமா? உன் யானை மேல் ஏறக்கூடாதா?" என்றாள் வானதி.

"இல்லை, இல்லை! கொடும்பாளூர் அரண்மனைக் கொட்டாரத்தில் எவ்வளவோ யானைகள் இருக்கின்றன; எத்தனையோ யானைப் பாகர்களும் இருக்கிறார்கள். நான் என்னத்திற்கு?" என்று சொல்லி விட்டு அந்த வாலிபன் விடு விடு என்று நடந்து போனான். அவன் ஒரு வேளை திரும்பிப் பார்ப்பானோ என்று சற்றுநேரம் வரையில் வானதி எதிர் பார்த்தாள். ஆனால் அவன் திரும்பியே பாராமல் நடந்து சென்று யானைமேல் ஏறிப் போய் விட்டான்.



இந்தச் சம்பவம் வானதியின் உள்ளத்தில் வெகுவாகப் பதிந்து விட்டது. அடிக்கடி அது அவளுடைய ஞாபகத்துக்கு வந்தது. அந்த யானைப் பாகனுடைய உருவத் தோற்றமும் மலர்ந்த முகமும் இனிய குரலும் நினைவுக்கு வந்த போதெல்லாம் உள்ளத்தில் இனந்

தெரியாத உணர்ச்சி உண்டாயிற்று. அவன் பறவைக் குஞ்சுகளைக் காப்பாற்ற யானை மேல் ஏறி வந்ததை நினைத்த போதெல்லாம் அவளையறியாமல் நகைப்பு வந்தது. தனக்குத்தானே சிரித்துக் கொண்டாள்; பிறகு அதற்காக வெட்கமும் அடைந்தாள். அந்த யானைப்பாகனின் அகம்பாவத்தையும், கொடும்பாளூர் என்ற வார்த்தையைக் கேட்டவுடனே அவன் முகத்தைச் சுருக்கிக் கொண்டு போய் விட்டதையும் எண்ணியபோதெல்லாம் அவன் பேரில் கோபம் உண்டாகி வளர்ந்தது. மொத்தத்தில், அந்த யானைப்பாகனைப் பற்றி அடிக்கடி நினைவு வந்து கொண்டிருந்தது. இது தவறோ என்ற சந்தேகமும் கூடத் தோன்றி அவளை மிகவும் வருத்திக் கொண்டிருந்தது.



ரு நல்லத்துக்குத் தமது தமக்கையைப் பார்க்கப் பொன்னியின் செல்வர் வரப் போகிறார் என்று அரண்மனையில் பேச்சாக இருந்தது. சோழ நாட்டின் கண்மணியாக விளங்கிய இளவரசரைப் பார்க்க வேண்டுமென்ற ஆவல் அரண்மனைப் பெண்கள் எல்லாருக்கும் இருந்ததுபோல் வானதிக்கும் இருந்தது. அதற்குச் சந்தர்ப்பம் எளிதில் கிடைக்கவில்லை. இளவரசர் வந்து விட்டார் என்று பேச்சாக இருந்ததே தவிர, அவர் அந்தப்புரத்துக்குள் வரவேயில்லை. இயற்கையில் சங்கோசம் நிறைந்த வானதியோ மற்றத் தோழிப் பெண்களைப்போல் சந்தர்ப்பத்தை உண்டு பண்ணிக் கொண்டு போய் அவரைப் பார்க்க விரும்பவில்லை. திருநல்லத்தை விட்டு இளவரசர் புறப்பட்ட அன்றைக்குத்தான் அரண்மனை மேல் மாடத்தில் நின்று வானதி பொன்னியின் செல்வரைப் பார்க்க நேர்ந்தது. அவர் யானையின்மீது ஏறிப் பிரயாணமாகிக் கொண்டிருந்தார். வானதி தன் கண்களை நம்ப முடியவில்லை என்றால், அது சம்பிரதாய வார்த்தையன்று. யானைப்பாகன் என்று தான் எண்ணிக் கேலிப் பேச்சுப் பேசிச் சிரித்து, அதிகாரம் செய்யவும் துணிந்த வாலிபனே இந்த மாநிலம் போற்றும் இளவரசர் அருள்மொழி வர்மர் என்று கண்டால், வானதி அவளுடைய கண்களை எப்படி நம்ப முடியும்? பின்னர், பக்கத்திலிருந்த பெண்களைப் பலமுறை கேட்டுத் தான் அதை நிச்சயம் செய்து கொண்டாள். இதனால் அவள் அடைந்த அவமானத்தையும் மன வேதனையையும் சொல்லிச் சாத்தியமில்லை.

உலகம் ஆளப்பிறந்தவருக்குக் கொடும்பாளூர் அரண்மனையின் யானைக் கொட்டாரத் தலைவன் உத்தியோகம் செய்து வைப்பதாகத் தான் சொன்னதை அவள் நினைத்தபோது ஒரு பக்கம் சிரிப்பு வந்தது; அதே சமயத்தில் கண்களில் கண்ணீர் வந்தது. தன்னுடைய மூடத்தனத்தை நினைத்து நினைத்து வருந்தினாள். அப்போது அவருடைய முகம் சுருங்கியதன் காரணம் அவரை "யானைப் பாகா!" என்று அழைத்தது தான் என்று நம்பினாள். நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் குணங்களில் ஒன்றும் இல்லாத பெண் என்று தான் தன்னைப் பற்றி அவர் எண்ணியிருப்பார்! இதை நினைத்த போது வானதியின் உள்ளம் அடைந்த வேதனைக்கு அளவே இல்லை. ஆற்றிலே, குளத்திலே விழுந்து உயிரையே விட்டு விடலாமா என்று கூடப் பலமுறை எண்ணினாள். இளைய பிராட்டி குந்தவையிடம் தான் செய்த குற்றத்தைச் சொல்லிவிடப் பலமுறை முயன்றாள். ஆனால் அதற்குத் துணிவு வரவில்லை; நா எழவில்லை. இளவரசரே குந்தவை தேவியிடம் சொல்லியிருந்தால் அவரே தன்னிடம் கேட்டிருப்பார். குந்தவை தேவி கேளாததினால் இளவரசர் சொல்லவில்லை என்று முடிவு செய்தாள். எத்தனையோ மனவேதனைக்கு மத்தியில் இந்த எண்ணம் அவளுக்குச் சிறிது ஆறுதல் அளித்தது. என்றைக்காவது ஒருநாள் பொன்னியின் செல்வரிடம் நேரில் மன்னிப்புக் கேட்டுக் கொண்ட பிறகு உயிரை விட்டு விடலாம் என்று கருதினாள். ஆனால் அதற்கும் தைரியம் வரவில்லை.

பழையாறைக்குப் போன பிறகு இளவரசரைச் சந்திக்கும் சந்தர்ப்பம் நேரலாம் என்று தோன்றிய போதெல்லாம் ஓடி ஒளிந்து கொண்டாள். இளவரசரின் முன்னால் போவதைக் காட்டிலும் உயிரையே விட்டு விடலாம் என்று கருதலானாள். திருநல்லத்தில் நடந்ததை அறியாத இளைய பிராட்டியும் அவளுடைய தோழிமார்களும், "இந்தப் பெண் இவ்வளவு கூச்சப்படுகிறாளே!" என்று மட்டும் ஆச்சரியப்பட்டார்கள்! அவளுடைய பயந்த சுபாவத்தோடு இதுவும் சேர்ந்தது என்று நினைத்தார்கள்.

பொன்னியின் செல்வர் தன்னிடம் அருவருப்புக் கொள்வதற்கு வேறு ஒரு முக்கிய காரணமும் உண்டு என்பதை வானதி விரைவில் அறிந்து கொண்டாள். இளவரசர் அருள்மொழி வர்மர் ஒரு காலத்தில் உலகமாளும் சக்கரவர்த்தியாவார் என்று பலரும் நம்பியது போல் அவளுடைய பிறந்த வீட்டிலும் நம்பினார்கள். அதனால் அவளை அருள்மொழி வர்மருக்கு மணம் செய்து வைத்து விட வேண்டும் என்று அவளுடைய பெரிய

தகப்பனார் திட்டமிட்டிருந்தார் என்பது வானதிக்கு ஒருவாறு தெரிந்திருந்தது. அந்த நோக்கத்துடனேயே அவளைப் பழையாறைக்குப் பூதி விக்கிரம கேசரி அனுப்பி வைத்திருப்பதாகக் குந்தவை தேவியின் மற்றத் தோழிப் பெண்கள் அடிக்கடி ஜாடைமாடையாகப் பேசிக் கொள்வார்கள். சில சமயம் வானதியிடமே சொல்லிப் பரிகசிப்பார்கள். "ஆகையினாலேதான் நீ இளவரசர் முன்னாலேயே போகமாட்டேன் என்கிறாய்! எங்களுக்குத் தெரியாதா உன் கள்ளத் தனம்?" என்பார்கள். இந்த வார்த்தைகள் வானதியின் காதில் நாராசமாக விழுந்தன. தான் கொடும்பாளூர்ப் பெண் என்று அறிந்ததும் யானைப் பாகனுடைய முகம் சுருங்கியதன் காரணம் இதுவாகவே இருக்கலாம் அல்லவா?

இவ்வாறெல்லாம் வானதியின் இளம் உள்ளம் கொந்தளித்துக் கொண்டிருந்த நிலைமையிலேதான் ஒருநாள் பொன்னியின் செல்வர் ஈழத்துப் போருக்குப் புறப்பட்டார். அன்றைக்கு அரண்மனையிலிருந்து எல்லாத் தோழிப் பெண்களும் கையில் மங்கள தீபங்களுடன் நின்று அவரை வாழ்த்தி அனுப்ப ஏற்பாடாகியிருந்தது. இந்தச் சமயத்திலும் வர முடியாது என்று மறுக்க வானதியினால் இயலவில்லை. போருக்குப் புறப்படும் இளவரசரை ஒருமுறை பார்த்து விடவேண்டும் என்ற ஆர்வமும் அவள் உள்ளத்தில் பொங்கியது. வாய் திறந்து பேசா விட்டாலும் தன் முகபாவத்தைக் கொண்டும் நயன பாஷையினாலும் அவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளலாம் என்ற சபலமும் இருந்தது. ஆனால், அவள் எண்ணியதற்கெல்லாம் மாறான சம்பவம் நடந்துவிட்டது. இளவரசர் அருகில் வந்து அவளை ஏறிட்டுப் பார்த்ததும் வானதி உணர்விழந்து தீபத்தையும் போட்டு விட்டுத் தரையில் விழுந்து மூர்ச்சையானாள். இதன் பிறகு நிகழ்ந்தவையெல்லாம் வாசகர்கள் அறிந்தவைதான் அல்லவா?



ட்டுக் கூரை ஓடத்தில் மிதந்து சென்று கொண்டிருந்த வானதி திருநல்லத்தை அணுகியபோது அவளுடையஉள்ளத்தில் மேற்கூறிய சம்பவங்கள் ஒன்றன் பின் ஒன்றாக வந்து சென்றன. பொன்னியின் செல்வருக்குத் தன்மீது அன்பும் அநுதாபமும் உண்டு என்பதை அவள் உணர்ந்திருந்தாள். அதை அவர் இளைய பிராட்டி மூலமாகவும் நேரிலேயும் தெரிவித்ததும் உண்டு. ஆனால் அவருடைய அன்பு பூரணமடையாத வண்ணம் அவ்வப்போது தடை செய்த முட்டுக் கட்டை ஒன்றும் இருந்தது. அது இன்னதென்பதையும் அவள் அறிந்திருந்தாள். இளவரசர் ஒரு காலத்தில் சக்கரவர்த்தியாகலாம் என்னும் எண்ணத்தின் பேரில் அவளை அவர் கழுத்தில் கட்டிவிடப் பார்க்கிறார்கள் என்று இளவரசர் நம்பியதுதான் அந்த முட்டுக் கட்டை. இவ்விதம் அவர் நம்புவதற்குக் காரணம் இல்லாமற் போகவில்லை. வானதியின் பெரிய தந்தை இதைப் பற்றிப் பலமுறை பேசியதுண்டு. ஏன்? இளையபிராட்டி குந்தவை தேவியே அந்தச் சதியாலோசனையில் சம்பந்தப் பட்டவர்தான். அது இன்னும் பலருக்கும் தெரிந்திருந்தது. அந்த ஓடக்காரப் பெண் பூங்குழலி கூட அதைக் குறிப்பிட்டுப் பரிகாசம் செய்யவில்லையா? ஆகையால் இளவரசர் மனத்தில் அந்த எண்ணம் தங்கி நின்று அவருடைய அன்புக்கே ஒரு முட்டுக்கட்டையாக இருந்ததில் வியப்பில்லைதான்!

ஆனால் சற்று முன்பு வானதி செய்த சபதத்தை இளவரசர் அறிய நேரும் போது அந்த முட்டுக்கட்டை நீங்கி விடும் அல்லவா? அதை அவர் அறியுமாறு நேரிடுமா? தானே அவரிடம் சொல்லிவிட்டால் என்ன? அடி அசட்டு வானதி! உனக்குத் தான் அவர் முன்னால் நின்றால் வாய் அடைத்து விடுகிறதே! அவரை யானைப்பாகன் என்று நீ எண்ணியபோது, இந்தத் திருநல்லத்தில் சக்கரவட்டமாகப்பேசி அவரிடம் 'வாயாடிப் பெண்' என்ற பெயரும் பெற்றாய்! அதற்குப் பிறகு அவரை முகம் எடுத்துப் பார்க்கவும் வாய் திறந்து பேசவும் உன்னால் முடியவில்லையே? அநாதை வானதி! மறுமுறை நீ இளவரசரைப் பார்க்க நேரும்போது அப்படி மோசம் போய்விடாதே! துணிச்சலுடன் உன் மனத்தில் உள்ளதைச் சொல்லிவிடு! "நீங்கள் சிங்காதனம் ஏறினாலும் நான் ஏறமாட்டேன்! அவ்வாறு சபதம் செய்திருக்கிறேன்!தாங்கள் வெறும்யானைப் பாகனாகவே இருந்து, என்னையும் தங்களுடன் யானை மீது ஏற்றிக் கொண்டு ஒரு தடவை சென்றால், அதையே சொர்க்க வாழ்விலும் மேலாகக் கருதுவேன்!" என்று தைரியமாகச் சொல்லிவிடு!

எல்லாம் சரிதான்! ஆனால் அவ்விதம் சொல்லுவதற்குச் சந்தர்ப்பம் கிடைக்குமா? இந்த வெள்ளம் என்னை எங்கே கொண்டு போய்ச் சேர்க்கப் போகிறது? கரை சேராமலே முழுகிச் செத்துப் போய் விடுவேனோ! ஒரு நாளும் அவ்விதம் நேராது. அதோ கரை தெரிகிறதே! திருநல்லத்து வசந்த மாளிகையின் மகுட கலசம் தெரிகிறதே! ஆஹா! இளவரசர் யானை மேல் ஏறி வந்து பறவைக் குஞ்சுகளைக் காப்பாற்றியதும் என்னுடன்

இதமாகப் பேசியதும் நேற்று நடந்தது போல் அல்லவா தோன்றுகின்றன?


துஎன்ன? அதோ ஒரு யானை! அதன்பேரில் ஒரு யானைப் பாகன்! வெள்ளத்தின் வேகத்தை அந்த யானை எவ்வளவு அலட்சியமாக முண்டிக்கொண்டு குன்று நகருவது போல் நகருகிறது! அதோ கரை ஏறிவிட்டது! கரையோடு மேற்கு நோக்கிச் செல்லுகிறது!

யானையின்மேல் கம்பீரமாக உட்கார்ந்திருப்பவன் யாராயிருக்கும்? ஒரு வேளை... சீச்சீ! இது என்ன பைத்தியக்கார எண்ணம்? இளவரசர் இங்கே எதற்காக இப்படித் தனியாக யானை மீது வருகிறார்?

ஒருமுறை யானைமீது வந்த இளவரசரை யானைப்பாகன் என்று நான் எண்ணி விட்டதால், அப்புறம் எந்த யானைப்பாகனைக் கண்டாலும் இளவரசராயிருக்கலாம் என்று சந்தேகிக்க வேண்டுமா? என்ன அறிவீனம்!

இருந்தாலும், இவன் வெறும் யானைப் பாகனாகவே இருந்தாலும், எனக்கு ஒரு வேளை உதவி செய்யக்கூடும் அல்லவா? என்னை இந்த ஓட்டுக்கூரை ஓடத்திலிருந்து, இந்தப் பெரு வெள்ளத்திலிருந்து, கரையேற்றி விடலாம் அல்லவா? நான் யார் என்று சொன்னால் என்னை யானை மேல் ஏற்றிப் பொன்னியின் செல்வரிடம் அழைத்துக் கொண்டு போகவும் கூடும் அல்லவா?

இத்தகைய எண்ணம் தோன்றியதும், வானதி, "யானைப் பாகா! யானைப் பாகா!" என்று கூவி அழைத்தாள்.

அது அவன் காதில் விழவில்லையோ, அல்லது விழுந்தும் அவன் இலட்சியம் செய்யவில்லையோ, தெரியாது. யானை நிற்கவும் இல்லை; யானைப்பாகன் திரும்பிப் பார்க்கவும் இல்லை! யானையின் நடை வேகமாகிக் கொண்டிருந்தது. வெகு சீக்கிரத்தில் நதிக்கரையின் வளைவு ஒன்றில் திரும்பி யானையும் யானைப் பாகனும் மறைந்து விட்டனர்.

வானதி இந்த ஏமாற்றத்தைப் பற்றி எண்ணமிடுவதற்குள் பெரும் பீதிகரமான மற்றொரு எண்ணம் அவள் மனத்தில் உதித்தது. ஓட்டுக்கூரை திடீரென்று அதிவேகமாகச் சுழன்று செல்லத் தொடங்கியதாகத் தோன்றியது. ஆம், ஆம்! ஆற்று வெள்ளம் அங்கே அதிகமான வேகத்தை அடைந்திருந்தது. நதிக் கரையும், அதன் ஓரத்தில் வளர்ந்திருந்த பிரம்மாண்டமான விருட்சங்களின் தடிமனான வேர்களும் அவளுடைய சமீபத்தில் விரைந்து வந்து கொண்டிருந்தன. அந்த மூலையை அடைந்ததும், இந்த ஓட்டுக்கூரை ஓடம் மரங்களின் வேர்களில் மோதிக் கொள்ளப் போவது நிச்சயம். மோதிக் கொண்டதும் தூள் தூளாகித் தண்ணீரில் முழுகிவிடும். பிறகு தன்னுடைய கதி என்ன? தப்பிப் பிழைத்துக் கரை ஏற முடியுமா? சுழல்களில் சிக்கி மரங்களின் வேர்களில் அடிபட்டுச் சாக நேரிடுமா?

ஐயோ! இது என்ன? அந்த மரங்களின் வேர்களுக்கு மத்தியில் பயங்கரமான முதலை ஒன்று வாயைப் பிளந்து கொண்டிருக்கிறதே! அது உண்மை முதலையா? அல்லது பொம்மை முதலையா? அல்லது என் உள்ளத்தின் பிரமையா?

இதோ கரை நெருங்கி விட்டது! மரங்களின் வேர்களின் மேல் ஓட்டுக் கூரை மோதிக் கொள்ளப் போகிறது!

வானதி தன் கண்களை இறுக்கி மூடிக் கொண்டாள்!

"தாயே! துர்க்கா பரமேசுவரி! தாய் தந்தையற்ற இந்த அநாதைப் பெண்ணுக்கு நீதான் கதி! என்னை உன் பாதங்களில் சேர்த்துக் கொள்!" — என்று பிரார்த்தனை செய்தாள்.

(தொடரும்)



"வரவர, என் ஞாபக மறதிக்கு எல்லையே இல்லாம போகுது, மந்திரி..."

"ஏன் அரசே?"

"நான் நேத்து, மாறுவேடம் போடாமலேயே, 'நகர்வலம்' போயிட்டேன்..."

— ஆர். வசந்தகுமார்.

தொண்டன் 1: தலைவர் அடிக்கடி இரண்டுக்கு மேல் வேண்டாம் என்று கூறுகிறாரே; குடும்பக் கட்டுப்பாடு பிரசாரம் செய்கிறாரா?

தொண்டன் 2: இல்லை; சின்ன வீடு பற்றி அறிவுரை வழங்குகிறார்!

— த. க. பார்த்திபன்.





# சின்னப்பதாஸ்

ரஜினிக்குச் சத்யராஜ் ஒன்றும் சளைத்தவர் அல்ல என்று ஊர் உலகம் மெச்சணும் என்பதற்காகவே வித்தை காட்டியிருக்கிறார்கள். உதாரணத்துக்கு: சத்யராஜின் குருட்டுத் தங்கையைக் கோவிலுக்குக் கூட்டிப் போவதாய்ச் சொல்லி, ஸ்டார் ஓட்டலுக்கு அழைத்துப் போய் அந்த ரௌடி மாணவர்கள் துச்சாதனம் பண்ணும் போது சத்யராஜ் குறுக்கிட்டு அவளை விடுவித்ததோடு நின்றாரா? தங்கையை ஆட்டோவில் அனுப்பிவிட்டுச் சாவகாசமாய்த் திரும்பி வந்து, 'அவளுக்குக் கண்ணு தெரியலைன்னு தானே உங்க வேலையைக் காட்டினீங்க? இப்ப நானும் கண்ணைக் கட்டிக்கிறேன், வாங்கடா,' என்று சவால் விட்டு, இரு கண்களையும் துணியால் இறுக்கிக் கட்டிக் கொண்டு தயாராக, 'எங்களுக்குக் காலேஜ்ல மட்டுமல்ல; இங்கேயும் ப்ராக்டீஸ்தான்,' என்று மாணவர்கள் படுரௌடி கும்பலை ஏவி விட, அவர் ஓசை வரும் திசையைக் குறி வைத்தே அத்தனை பேரையும் பந்தாடித் தீர்க்கிறாராம். இந்த நுணுக்கமறிந்த எதிரிகள் ஸ்டீரியோவை முடுக்கிவிட்டு, காலோசை தெரியாமல் அமுக்கிச் சத்யராஜைச் சாய்க்கப் பார்த்தால் நடக்குமா? ஸ்டீரியோ இருக்கும் திக்கைக் குறி வைத்துச் சும்மா விட்டார் பாருங்கள் ஒரு குத்து! தூள் தூள். அப்புறம் பாய்ச்சல் காட்டிய அத்தனை பேரும் அம்பேல். எப்படி? (எல்கேஜி விருந்து!)

கள்ளக்கடத்தல் கும்பல்; அவர்கள் வலையில் விழுந்த சட்டம் தெரிந்த கதாநாயகன்; அப்புறம் காவலர்க்குத் துணை நின்று மோசக்காரர்களைப் பிடித்துக் கொடுத்தல் — அதே ஃபார்முலாதான்.

இதிலே கதாநாயகனுக்குத் துணை நிற்கும் கதாநாயகி செவிமலர் சூட்ட வரும் விசித்திரப் பாத்திரம். புகை நுழையாத இடத்திலும் நுழைந்து புலனறியும் சு.சு. கூட்டத்தாருக்கு உள்ளூர் பெண் போலீஸ்தான் தங்களுடன் கலந்துறவாடும் காபரே டான்ஸர் என்பது தெரியாமல் போய் விட்டதாம். இப்படிப் பச்சைக் கவர்ச்சி காட்டினால் தான் இனித் திரையுலக வாய்ப்பு என்று பூரண 'வளர்ச்சி' பெற்ற ராதா தன்னை ரொம்பக் கொச்சைப்படுத்திக் கொண்டு விட்டதைக் காணப் பரிதாபமாய் இருக்கிறது.

இடைவேளையுடன் காலகதியாகும் முதல் ராதாவுக்குப் பிறகு வரும் இரண்டாவது ராதா (முன்னவரின் தங்கையாம்!) டாக்டர் கவிதா ஆரம்பத்தில் கண்ணியம் காட்டியவர், போகப் போக அக்காவை அடியொற்றிப் போய் வித்தியாசம் தெரியாமல்... என்னமோ போங்கள்.

நிலத்திலும் நீரிலும் செல்லும் அந்த லேட்டஸ்ட் வாகனத்தில் சத்யராஜ் கள்ளக் கடத்தல் கும்பலை வளைக்கும் அந்த க்ளைமாக்ஸ் காட்சி — அடடா, சூப்பரோ சூப்பர் சாதனைதான்.

தேர்ந்தெடுத்த வெளிப்புறக் காட்சிகள், சூழ்நிலைகள், காஸ்ட்யூம்கள், தண்ணீராய் இறைத்திருக்கும் கரன்ஸிகள் இவற்றை ஓரளவு நம்பத்தக்க கதையில் ஏதோ கொஞ்சம் உபயோகமாய்ச் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தில் செலவழித்திருந்தால் குடியா முழுகிப் போய்விடும்....? ஊஹூம்....!

— பி. எஸ். எஸ்.

# காந்திஜி கூறிய டயரிக் குறிப்பு!

எண்பத்து மூன்று வயதாகிறது சவிதா பென் காம்தாருக்கு. ஆனால் சுறுசுறுப்பின் மொத்த உருவமாகக் காட்சி அளிக்கிறார். "இது ஒன்றும் கஷ்டமில்லை; எல்லோருமே நோய் நொடி இல்லாமல் இப்படி ஆரோக்கியமாக இருக்க முடியும்" என்கிறார் சவிதாபென். எப்படி?

"பொய் சொல்லக் கூடாது.
குறைவாகச் சாப்பிடணும்.
குறைவாகப் பேசணும்.
குரோதம் கூடாது.

யார் இந்த சவிதாபென்?

காந்திஜி, மோதிலால் நேரு, என்று முந்நாள் தலைவர்கள் தொடங்கி, எம்.ஜி.ஆர்., கருணாநிதி வரை இவர் சந்தித்துப் பேசாத தலைவர்கள் இல்லை. "வினோபாஜியுடன் பூதான இயக்கத்தில் சேர்ந்து உழைத்திருக்கிறேன்" — என்கிறார் சவிதாபென்.

சவிதாபென் சென்னை அபய நிலையத்தின் துணைத் தலைவர். ஜெயின் மகளிர் சங்கத் தலைவர். ஜாதி—மத வேறுபாடின்றிப் பல கைத் தொழில்களில் இந்த மகளிர் சங்கம் பயிற்சி அளிக்கிறது; சொந்தக் கட்டடம் இருக்கிறது இந்தச் சங்கத்துக்கு.

பத்து வருடங்களாக, ரட்சாபந்தன் அன்று சென்னை மத்திய சிறைக்குச் சென்று கைதிகள் அத்தனை பேருக்கும் இனிப்பு வழங்குவதைக் கட்டாயமாக வைத்திருக்கிறார், சவிதா. சுதந்திரப் போராட்டத்தில் தீவிர பங்கு வகித்தவர்.

"1930—ல், மகாராஷ்டிராவிலுள்ள தாணா சிறைச் சாலையில் இருந்தேன். அப்போது நான் காங்கிரஸ் செயற்குழு உறுப்பினர். என்னுடன் இன்னும் பன்னிரண்டு பெண்கள் சிறையில் இருந்தார்கள்."

"எதற்குச் சிறைத் தண்டனை?"

"தடையை மீறி ஊர்வலம் போனோம். இயக்கச் செய்திகளை விளக்கும் பத்திரிகையை, காட்கோபரில் உள்ள என் வீட்டிலிருந்து வெளியிட்டோம்."

1942ல் மறுபடி எட்டு நாட்கள் லாக்—அப்பில் இருந்தார் சவிதாபென். குற்றம் எதுவும் செய்ததாக ருசுவாகவில்லை. எனவே விடுதலை செய்யப்பட்டார்.

பம்பாய் செம்பூர் பகுதியில், குடியை எதிர்த்து, மகாத்மாவுடன் சேர்ந்து மறியல் செய்தனர் சவிதாபென்னும், பிற தொண்டர்களும். ஒரு பார்ஸி வியாபாரி நடத்திய மதுக் கடைக்கு எதிரே போராட்டம் தொடங்கியது.

"கொஞ்ச நாளில் கடை மூடப்பட்டது. இரண்டு மாதங்களாக அந்தக் கடைக்கு யாரும் வந்து குடிக்கவில்லை. எங்களுக்கும் தினம் தினம் அங்கே வந்து உட்கார்ந்து உட்கார்ந்து சோர்வாகப் போய் விட்டது. காந்திஜியிடம் இதைச் சொன்னோம்.

"சோர்வா? ஒரு டயரி கொண்டு வாருங்கள். சமூக சேவை செய்ய வருபவர்கள் சோர்வு அடையவே கூடாது என்று அதில் எழுதி வைத்துக் கொள்ளுங்கள்!' என்றார் மகாத்மா.

"பம்பாய் விலே பார்லேயில் காந்தி ஆசிரமத்தில் தங்கியிருந்தது மற்றோர் அனுபவம். காலை நாலு மணிக்கே எழுந்து விட வேண்டும். சர்வ மதப் பிரார்த்தனைக்குப் பிறகு, பாத்ரூம் சுத்தம் செய்தல், சமைத்தல், ராட்டையில் நூல் நூற்றல் என்று எல்லாருமே ஒவ்வொன்றாகச் செய்தாக வேண்டும்."

குஜராத் மாநில சௌராஷ்டிர பகுதியில் உள்ள ஜெத்பூர் கிராமத்திலிருந்து பல வருடங்களுக்கு முன்பு சென்னை வந்தவர் சவிதாபென். "எளிமையான வாழ்க்கை; உயர்ந்த சிந்தனை — இதுதான் என் மந்திரம்!" என்கிறார் அமைதியாக.

"இந்த வயதிலும் அவர் வேலைகளை அவரே செய்து கொள்ளுகிறார். சமூகப் பணிகளிலும் சளைக்கவில்லை!" என்று சர்ட்டிபிகேட் கொடுத்தார் அவரது மருமகள்.

— சாருகேசி.

* சவிதாபென் — இன்றைய முதல்வருடன்.



# இரண்டாவது

'இந்த விவாகரத்தின் பொருட்டு திரு கதிரேசன் அவர்களிடம் நான் பொருளாகவோ பணமாகவோ எந்த நஷ்டஈடும் கோரவில்லை. இவ் விவாகரத்திற்கு நான் மனமுவந்து ஒப்புதல் அளித்தபடியாலும், அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ள வசதியான ஒரு வேலையில் நான் இருப்பதாலும் என் பொருட்டு எந்த முறையிலும், எவரிடமும் அவர் நஷ்ட ஈடு எக்காலத்திலும் தர வேண்டியதில்லை.

என் இரண்டு குழந்தைகள் — ராஜேந்திரன் (வயது 12) பூங்குழலி (வயது 7) — வளர்ப்பு பொருட்டு அவர் வருவாயிலிருந்து தர வேண்டிய தலா ஒன்றின் கீழ் ஐந்து பாகத்திற்குப் பதிலாக இரு பத்தியேழு, ஜம்புலிங்கம் தெரு மயிலாப்பூர் என்கிற விலாசமுள்ள வீட்டை, (ரிஜிஸ்ட்ரேஷன் எண் 1116/1958) ராஜேந்திரன் வயது பன்னிரண்டு என்கிற என் மகனின் பெயரில் தருவதை மொத்த நஷ்டஈடாய்க் கருதி.. முழுமனதாய் ஏற்றுக் கொண்டு, இவ்வகையில் எக்காலத்திலும் எந்த விதமான வழக்கும் எந்த கோர்ட்டிலும் திரு கதிரேசன் மீது தொடர மாட்டேன் என்று உறுதி கூறி.....

பானுமதி சாவி போட்டுக் கதவு திறந்தாள். துணிப் பையையும் பாத்திர மூட்டையையும் சைக்கிள் ரிக்ஷாக்காரன் கொண்டு வந்து ஹாலில் வைத்தான். குழந்தைகள் அசதியுடன் வந்து நாற்காலியில் சுருண்டு கொண்டன.

'இனிமே பாட்டி வீட்டுக்குப் போகப் போறதில்லையா? இங்கே தான் இருக்கப் போறோமா? '' பெண் கேட்டது.

''ஆமா, இனிமேல் இங்க தான்.''

''அப்ப எனக்கு யார் சோறு ஊட்டு வாங்க? ''

''நீயே தான் சாப்பிடணும்.''

''கீழெல்லாம் சிந்திடுவேனே!''

''சிந்தாம சாப்பிடக் கத்துக்கணும்.''

''ரிக்ஷாக்காரனுக்குக் காசு கொடுத்து



# சூரியன் 3

அனுப்பினாள். வாசல் கதவு தாழ் போட்டாள்.

நாற்பது பவுன் நகை இருக்கிறது. இரண்டு ரூம், ஒரு ஹால், ஒரு சமையலறை கொண்ட தொள்ளாயிர சதுர அடி வீடு இருக்கிறது. சுற்றித் தோட்டம் இருக்கிறது. இது மைனர் சொத்து. விற்க முடியாது. ராஜேந்திரனுக்கு இருபத்தியொரு வயசு வரும் வரைக்கும் எதுவும் செய்ய முடியாது.

கெமிஸ்டரி டீச்சர் உத்தியோகம். ராமகிருஷ்ணா மடத்து ரோட்டில் மந்தவெளியில் பள்ளிக் கூடம். பூங்குழலி செகண்ட் ஸ்டாண்டர்ட். ராஜேந்திரன் எய்த் ஸ்டாண்டர்ட். பக்கத்து ஆண்கள் பள்ளியில் படிக்கிறான். மற்ற விவாகரத்து வழக்குகளை விட என் இடம் நிச்சயம் சௌகர்யம். குழந்தைகளைத் துணைக்கு வைத்துக் கொண்டு மேலே வந்து விட முடியும். ஐந்து டியூஷன் எடுத்தால் கூட ஆயிரம் வரும். இன்னும் நான்கு நாட்கள் லீவு போட்டால் கால் பரீட்சை லீவு — ஒரு வாரம். வீட்டை ஒழித்துச் சுத்தம் பண்ணி விட்டுப் போன பாடங்களைக் குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுத்து......

அந்த மனிதனைப் பிரிந்து ஒரு வருடம் இங்கேயும் அம்மாவீட்டிலும் இருந்தாயிற்று. இனி இந்த இடம்தான் என் இடம். என் கூடு, என் வளை.

அம்மா கூச்சமில்லாது வெளியே போ என்று சொல்லிவிட்டாள். மரியாதைக்குக் கூடத் தம்பி தடுக்கவில்லை. ஒருவேளை அவன் தூண்டித்தான் அவள் துரத்தினாளோ என்னவோ?

''அவள் எங்கேடி போவா...?'' அப்பா கேட்டார்.

''அது நோட்டீஸ் விடறதுக்கு முன்ன யோசிச்சிருக்கணும். உன்னை விட்டேனா பாருன்னு புருஷனை எதிர்த்து எகிறிக் குதிச்சிட்டு.....

''என்ன! அவளை அடிபட்டுச் சாகச் சொல்றியா?''

''எந்த ஆம்பிளை அடிக்கலை? ஏன் நீ என்ன உத்தமமா? நீ அடிச்சதில்லையா என்னை? உங்கப்பாருக்கு வெந்நீர் வைச்சுத்தரலைன்னு என்னைத் தலையிலேயே அடிக்கலை...? கார்த்திகை சீர் வரலைன்னு சாப்பிடற தட்டைத்தூக்கிஅடிக்கலை...?



.... நான் என்ன அடிக்குப் பயந்து ஓடினேனா? ஓடியிருந்தா இன்னிக்கு இவ படிச்சு நிமிர்ந்து தாலி கட்டிட்டு இருப்பாளா? என்னவோ முன்கோபம், கைநீட்டறான்!''

அம்மாவுக்கு ஆரம்பத்திலிருந்து இது பிடிக்கவில்லை. அப்பாவுக்குப் பயந்து வீட்டுக்கு வரவழைத்தாலும், தனியே கூப்பிட்டுப் பொருமினாள். ''ஊர் உலகத்துல காறி துப்புவாங்கடி!''

''யாரை?''

''என்னைத்தான் துப்புவாங்க வளர்த்த லட்சணத்துக்கு.''

''உம் மூஞ்சி எச்சபடாத இருக்க நான் செருப்படி படணுமா தினமும்?''

''பொட்டச்சி நினைச்சா ஆம்பளையைக் கைக்குள்ள போட்டுக்கலாண்டி. நீ கால் மேல் கால் போட்டுப் புஸ்தகம் படிக்கறியே கண்டி, எப்படி குறைக்கலாம் புருஷன் ஜுரத்தைன்னு யோசிக்கறியா? படிக்க வச்சது தப்புடி!''

பி.எஸ்ஸி பரீட்சை எழுதியதும் திருமணத்துக்கு அலைந்தார்கள். பானுமதிக்கும் 'சரி! போதும் படிப்பு' என்று தான் தோன்றியது. பி.எஸ்ஸி முதல் வகுப்பில் பாஸ் செய்ததும் மாநிலத்திலேயே இரண்டாவது இடம் பெற்றதும் மேலே படித்தால் என்ன என்று யோசிக்க வைத்தது. அப்பாவிடம் கெஞ்ச, சரியென்று சொல்லி விட்டார்.

எம்.எஸ்ஸி படிக்கும் போது தான் உலகம் பற்றிய விழிப்பே தோன்றியது.

''நம்ம ஜாதில உன் படிப்பு படிச்ச பசங்க ரொம்ப கம்மி பானுமதி.''

''வேணாம்பா. பி. ஏ. படிச்ச ஆள் கூட போதும்.''

''ஆ.... அது நல்லா இருக்காது.''

''படிப்பு பெரிய விஷயமில்லைப்பா. படிச்ச முட்டாள் நிறைய இருக்கான். தன்மையான ஆளா இருந்தா போதும்.''

''தமிழ்ல எம்.ஏவாம். கதிரேசன்னு பேரு. டாக்டரேட் செய்யறாரு.''

''எதுல?''

''தெரியலை. தன்னைப் பத்தி எழுதிக் கொடுத்திருக்காரு.''

''யாருக்கு?''

''பொதுவா நம்ம எல்லோருக்கும். நான் துருவித் துருவிப் படிப்பு கேட்டேன். அவர் சொன்னது பாதி புரியலை. அவருக்கே பொறுமை போய் மடமடன்னு எழுதிக் கொடுத்துட்டாரு.''

பேப்பர் பிரித்தாள்.

'நான் கதிரேசன். 29. என் பாட்டனாருக்குப் பாட்டனார் புலவர்களைப் பேணும் புரவலனாக இருந்திருப்பதாகத் தெரிகிறது. அதன் பயனோ என்னவோ

பாலகுமாரன்



''பெண் பார்க்கப் போன இடத்தில், என்ன கலாட்டா?''

''நல்லாச் சமைக்க வருமான்னு, நான் கேட்டதுக்கு, 'அது, உங்க 'கைவாகை'ப் பொறுத்ததுன்னு' — பதில் சொல்றா, அந்தப் பொண்ணு!''

— ஆர். வசந்தகுமார்.

நான் தமிழ் மீது மாறாக் காதல் கொண்டேன்.

இருபத்தியோரு வயதில் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் சிறை சென்றேன். ஒரு கட்சி சார்புள்ளவனாய் இருந்தேன். பிறகு கட்சிப் பணி விடுத்துத் தமிழ்ப் பணியே தலையாய பணி என்று தமிழ் இலக்கியத்தில் முதுகலை படித்து, சிலப்பதிகாரத்தில் மக்கள் வாழ்க்கை என்பது பற்றி ஆய்வு செய்தேன்.

கடற்கரைக் கல்லூரியில் விரிவுரையாளராகவும் பின்னர் பேராசிரியராகவும் ஆனேன். சங்கப்பாடல்களும், பெண்டிர் வாழ்க்கையும் பற்றித் தமிழ் ஐயா நெடும்பகை கீரனார் தலைமையில் ஆராய்ச்சியில் ஈடுபட்டு, இருபத்தெட்டாம் வயதில் டாக்டர் பட்டம் பெற்றேன்.

பட்டி மண்டபப் பேச்சாளன். கவிதை எழுதும் திறமை பெற்றவன். மாலத் தீவுகளில் தமிழர் தோற்றம் என்பது பற்றி ஆராய்ந்து வருகிறேன். முதல் தமிழ் மாநாட்டில் கலந்துரையாற்றியும், இரண்டாவதில் கவியரங்கத் தொகுப்புக்கு உறுதுணையாகவும், கி ழ க் கா சி ய த் தமிழ் வளர்ச்சிப் பயணக் குழுவில், நடன, நாடக அரங்க நிர்வாகப் பொ று ப் பு ம் பெற்றேன். தமிழ் வளர்ச்சிக் கழகத்தில் உறுப்பினர். தமிழ் லெக்ஸிகன் தயாரிப்புக் குழுவில் உறுப்பினர். கடல் கடந்து வாழும் தமிழருக்குத் தமிழ் கல்வித் திட்டத்தில் செயலர். கம்பன் கழகத்தில் உறுப்பினர். மேடைப் பேச்சில் வாங்கிய பரிசுகள் எண்ணற்றவை.

தமிழ் மீது காதல் கொண்டவனாயினும் ஆங்கிலத்தைப் புறக்கணித்ததில்லை. எனக்குப் பிடித்த ஆங்கில ஆசிரியர்கள் பட்டியல் பின் வருமாறு — (பட்டியல் எழுதப் பட்டிருந்தது.)

எனக்கு நெல் முனையளவும் புரியாத விஷயம் வேதியலும், ரசாயனமும். ஓர் இனிப்பு வாசனை வரும் ரசாயனக் கூடத்தில் நுழைந்தாலே எனக்கு மன எதிர்ப்பும் உடல் எதிர்ப்பும் வந்து விடுகின்றன. கற்றுக் கொள்ள வேண்டும் என்கிற பேரவா உண்டு. தகுந்த ஆசிரியரைத் தேடிக் கொண்டிருக்கிறேன்.'

பானுமதி சட்டென்று முகம் சிவந்து சறுக்கியது இங்கேதான்.

''என்னம்மா நாலஞ்சு தடவைக்கு மேல் அதைப் படிக்கறே.''

''நல்லா எழுதியிருக்காருப்பா.''

''முடிச்சுடட்டுமா?''

''ம்ம்.''

**அ**திகம் கேட்டார்கள். அப்பா மயங்கினார். ''இருபது பவுனு சரி.... இருபத்தஞ்சு கொடுத்துடலாம். நாப்பது கேட்கறானுங்களே...!'' முப்பத்தி ஐந்துக்கு முடிந்தது.

''இப்பத்தான் இரண்டு வருஷமா சம்பாதிக்கப் போகிறான். அதுக்கு முன்ன படிப்பு... படிப்பு தான். படிக்கற புள்ளைய தடுக்கக் கூடாது தான். கடைசி நிலத்தையும் வித்துப் படிக்க வச்சோம்.''

திருமணச் செலவு அவர்களுடையது என்றார்கள். ரிசப்ஷனை ஷேர் பண்ணிக் கொள்ளச் சொன்னார்கள். திருமணத்தைத் திருவான்மியூர் கோவிலில் நடத்தினார்கள். விருந்தை எதிர் மண்டபத்தில் போ ட் டார்கள்.

''எங்க... ஒரு பூ மண்டபம் கூட போடலை என்னங்க இது...'' இவள் வீடு அலுத்துக் கொண்டது.

''கோவில்ல, பூ மண்டபம் நாட்டக் கூடாதுன்னுட்டாங்க. அதான் போடலை. சொல்லி வச்சு அட்வான்ஸ் கொடுத்தமே...''

''கோவில் ஆளே ஊதறான் கல்யாணத்துக்கு!''

''வேற வாத்தியம் உள்ள வரக் கூடாதுன்னுட்டாங்க. இவனும் சும்மா ஊதலை. துட்டு தான்.''

''பொண்ணு அழைப்பு இல்லேன்னுட்டீங்க?''

''எல்லாம் சின்ன வயசுல கல்யாணம் செய்தா கூட்டியாறது தான். எங்க புள்ளைக்குப் பொண்ணைச் சிங்காரிச்சுத் தெருவுல இட்டாரது புடிக்கலை.''

சமையல் சுமாராய் இருந்தது. அளந்து அளந்து போட்டார்கள். யார் நீங்க என்ன உறவு என்று கேட்டுவிட்டுப் போட்டார்கள்.

''அப்படி ஒண்ணும் மொய் எழுதிடலை யாரும். உங்க உறவுக்குப் பத்திரிகை வச்சீங்களா இல்லை வேணாம்னு வுட்டீங்களா? சாயந்திரம் பாருங்க. பையனுக்கு வர கூட்டத்தை.''

**பே**ய் கூட்டம்! மொய் எழுதுகிற கூட்டமில்லை. மலர் மாலை, கைத்தறித்துண்டு, புத்தகக்கட்டு, எலுமிச்சம் பழம், கை கூப்பல்.

எல்லா கட்சித் தலைவர்களும் வந்திருந்தார்கள். பெரிய பேச்சாளர்கள் வந்திருந்தார்கள். உடன் படித்த தோழர்கள் வந்திருந்தார்கள். கல்லூரி மாணவர்கள் மாணவியர் வந்திருந்தார்கள். வித விதமான கரை போட்ட துண்டுகள் உலாவின. இரண்டு மூன்று சினிமா நட்சத்திரங்கள் வந்திருந்தனர். யாரோ சட்டமிட்டக் கண்ணாடிக்



○○ அளவுக்கு மீறிய ஆர்வம் உடை யவனைக் குறிக்கும் ஆங்கிலச் சொல்லான fanatic என்பதன் சுருக்கமே fan என்பது. அதனை விசிறி என்று சம்பந்தமேயில் லாமல் நாம் உபயோகித்து வருகிறோம். சினிமா விசிறி, கிரிக்கெட் விசிறி என்று கூறுகிறோம்!

நன்றி: 'கதம்பம்'
— 'அனுராதா ஆபஸ்தம்பன்.

கவிதை படித்தார்கள்.

'கதிரைக் கை பிடிக்கும் மதியே
குணவதியே
நீ பிறக்கும் போதே இவனைப் பாதியாய்
இணைத்துக் கொண்டாய் என்று உன்
பெயரைப் பார்த்துப் புரிந்து கொண்டேன்.
பானு... அவன்
மதி... நீ.
சூரியனும் சந்திரனும் சேரும் மணநாளில்
சில நட்சத்திரங்களும் மின்னுகின்றன.'

முதலமைச்சர் வந்தார். கூடவே நாற்பது பேர் ஓடிவந்தார்கள். முதல்வர் வந்த இரண்டு நிமிடம் கழித்துச் செக்கச் சிவந்த நடிகர் வந்தார். கூடவே நூறு பேர் உள்ளே நுழைந்தார்கள். கூடம் அதிர வாழ்த்தொலி எழுப்பினார்கள். பானுமதிக்குப் புத்தி இருட்டிற்று. அப்பாவைக் காணோம். அம்மாவைப் பகலிலிருந்தே பார்க்கவில்லை. மாமனாரும், மாமியாரும் மேடைவிட்டு இறங்கவேயில்லை. இத்தனை பேருக்கும் இந்த மனிதர் பத்திரிகை கொடுத்திருக்கவே முடியாது என்று தோன்றிற்று. அப்படி பத்திரிகை கொடுத்திருந்தால் நாலாயிரம், ஐயாயிரம் பத்திரிகை கொடுத்திருக்க வேண்டியிருக்கும். இல்லை, போஸ்டர் அடித்து அனைவரும் வருக என்று கூப்பிட்டிருக்க வேண்டும்.

கதிரேசன், பானுமதி திருமணத்திற்கு வருகை தரும் முதல்வர் வாழ்க என்று தான் போஸ்டர் போடப்பட்டிருந்தது. அவர் போட்டோ தான் இருந்தது. வந்தவுடன் மாலை போட்டு முதல்வருக்கு மைக் கொடுத்தார்கள்.

— மண்டபத்திற்குள் நுழையும்போது ஒரு கவிதை செவிகளில் விழுந்தது. — முதல்வர் பேசத் துவங்கினார். கூட்டம் அமைதியாயிற்று. "மதியே குணவதியே என்று வர்ணனை கேட்டது. ஆனால் வானஇயல்படி சந்திரனும் ஒரு நட்சத்திரம் தான். பூமிக்கு மிக அருகே இருக்கிற மிகப் பெரிய நட்சத்திரம் தான்." கூட்டம் சிவந்த நடிகரை நோக்கிக் கைதட்டிற்று. வாழ்த்தொலிகள் பறந்தன. முதல்வர் தொடர்ந்தார். "ஆனால் குணவதியே, மதியே நீ யார் கையைப் படித்துக் கொள்கிறாய். கதிரின் கையைப் பிடித்துக் கொண்டிருக்கிறாய். சூரியன் எதிரே நட்சத்திரம் ஒளி பெறாது. ஒளி வீசினாலும் எடுபடாது. எனவே யாரைப் பின் தொடருகிறோம் எனப் புரிந்து கொண்டு அதற்கேற்றபடி வாழ்க்கை நடத்து." மறுபடி கூட்டம் கைதட்டிற்று.

அவர் பேசினது முழுக்க, முழுக்க அரசியல் என்றார்கள். பொடிவைத்துப் பேசினதாகச் சொன்னார்கள். மணமக்கள் பெயரை வைத்துக் கொண்டு வார்த்தை விளையாட்டு விளையாடினார் என்று விவாதம் செய்தார்கள். யாரையோ மறைமுகமாக எச்சரித்ததாகச் சொன்னார்கள்.

கதிரேசன் வீடு கிறுக்குப் பிடித்தது போல நடந்து கொண்டது.

அண்ணன் வராரு. அண்ணன் வராரு என்று எல்லோரையும் பிடித்துத் தள்ளினார்கள். குழந்தைகளைக் கொத்தாய்த் தூக்கி ஓரம் போட்டார்கள். வந்தவங்க சாப்பிட்டபிறகு தான் மத்தவங்க நுழையணும் என்று சாப்பாட்டுக் கூடத்தில் மறித்தார்கள். பானுமதி பள்ளியில் வேலை செய்த டீச்சர்களை 'ஒரே கொண்டைக் காரிங்களா உட்கார்ந்திருந்தார்களே.... கலர் கொடுத்தனுப்பு. சாப்பாடு உறவுக் காரர்களுக்கு மட்டும்னு சொல்லு.' அதட்டினார்கள். தலைவரும் தலைவர் கூட்டமும், நடிகரும், நடிகர் கூட்டமும் இருந்து சாப்பிட்டு விட்டுத் தான் போயின. அடுத்த பந்திக்கே அடுப்பு மூட்ட வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது.

மறுநாள் விருந்துக்கு வந்து விட்டு இதையே பேசிக் கொண்டிருந்தார்கள்.

"கட்சி பிரிஞ்சிடும் சீக்கிரம்," என்றார்கள்.

"நீங்க அந்தக் கட்சியா மாப்பிள்ளை?" அப்பா பவ்யமாகக் கேட்டார்.

"கவிஞனுக்குக் கட்சி கிடையாது மாமா. எல்லாப் பக்கத்திலேருந்தும் கூப்பிடுவாங்க. போய்க் கவிதை சொல்லிட்டு வருவேன்."

அதுதான் கதிரேசனுடைய உண்மையான முகம். கதிரேசன் வியாபாரி. தமிழ் விற்கிறவன். படி கணக்கில், கிலோ கணக்கில், கேட்கிறவர் விரும்புகிற ருசியாய், சூழ்நிலைக்குத் தகுந்தபடி சாதுர்யமாய்த் தமிழ் விற்கிறவன். அவன் லட்சியங்கள் கைதட்டல், மலர்மாலை, பட்டப் பெயர், சுற்றி ஒரு கூட்டம், கடற்கரைக் கல்லூரியில் முதல்வர் பதவி, தன்னை எல்லோரும் தமிழ் ஐயா என்று கூப்பிட வேண்டும் என்கிற பேராசை. ஆசை என்பதன் மறு பெயர் சுயநலம். தான் தன் குடும்பம் என்கிற சுயநலம். ஆனால் பேராசை என்பதன் பொருள், தான் மட்டுமே என்கிற சுயநலம். பானுமதி அவன் சுயநலத்துக்குப் பலியானாள்.

(தொடரும்)



# விளக்கு பூஜை-சில சிறப்புச்

வானவில்லின் அத்தனை வண்ணங்களும் வரிசை மறந்து அணிவகுத்தாற்போல், ஒளிரும் வண்ணப் பட்டாடை உடுத்திய பெண்கள் — நூற்றுக்கணக்கான பெண்கள் — நீண்ட வரிசைகளில் அமர்ந்திருக்கிறார்கள். ஒவ்வொருத்தர் எதிரிலும் 'பஞ்சுத் திரிபோட்டு, குளம்போல் எண்ணெய் விட்டு, கோலமுடன் ஏற்றிவைத்த' குத்துவிளக்கு. ஒலிபெருக்கியில் லலிதா சஹஸ்ரநாம ஸ்தோத்திரத்தை ஒருவர் ஓத, அதைத் திரும்பிச் சொன்னபடியே வளையணிந்த பல நூறு மென்கரங்கள் குங்குமத்தையும் மஞ்சளையும், அட்சதையையும் எடுத்து விளக்குகளுக்கு அர்ச்சனை செய்கின்றன.

சமீப காலமாக இதைப் போன்ற விளக்கு பூஜைகள் நிறையச் செய்யப்பட்டு வருகின்றன. இந்தப் பழக்கம் குறித்து பாலகிருஷ்ண சாஸ்திரிகளிடம் கேட்டோம்.

''நமது பழைய சாஸ்திரங்களிலோ, புராணங்களிலோ இதைப் போன்ற விளக்கு பூஜைகள் செய்ததற்கான ஆதாரங்கள் இல்லை..... எனினும், கலியுகத்தில் பூஜை புனஸ்காரங்களுக்குத் தான் அதிக இடம் உண்டு. புதிதாக ஒரு நல்ல காரியத்தைச் செய்வதற்குச் சாஸ்திர ஆதாரம் தேட வேண்டாம்'' என்றார் சாஸ்திரிகள்.

சாஸ்திர ரீதியாகப் பார்த்தால் பெண்கள் பூஜை செய்வது கிடையாது என்று கூறியவர் அதற்கான காரணத்தையும் விளக்கினார்.

''பெண்கள், இல்லத்தில் அக்னி மூட்டிச் சமைப்பது ஆண்கள் செய்யும் அக்னிஹோத்திரத்துக்குச் சமானமானதாகக் கருதப்பட்டது. அன்றாடக் காரியமான சமையலே ஒரு புனிதமான கர்மாதான். இன்னும் பார்க்கப் போனால், பெண்களின் இந்தப் புனித எல்லைக்குள் ஆண்களுக்கு அனுமதி மறுக்கப்பட்டு வந்ததோடு, ஆண்கள்வளர்க்கும் அக்னிக்குக் கூட, இல்லத்தரசிதான்,



**மகளிர் சமத்துவத்துக்கும் விளக்கு பூஜைக்கும் தொடர்பு இருக்கிறது என்று சொன்னால் நம்புவீர்களா...? உண்மையில் இருக்கிறது! இக்கட்டுரையைப் படித்தால் புரியும்.**

# செய்திகள்

தான் மூட்டிய அடுப்பிலிருந்து தணல் கொண்டுவந்து தன் கையால் வழங்க வேண்டும்.

"உடல், மன சுத்தத்துடன் சமைப்பதே நித்திய பூஜை போன்றதுதான் என்பதால் பெண்கள் தனியே பூஜை செய்ய வேண்டாம்; காலையும் மாலையும் தீபம் ஏற்றி நமஸ்கரித்தால் போதும் என்று சாஸ்திரம் ஏற்பட்டது.

"ஆனால், நாளாவட்டத்தில் வழக்கங்கள் மாறின. பெண்களுக்கு வழங்கிய உயர் அந்தஸ்தையும் சமத்துவத்தையும் நாம் மறுக்க, மறுக்க, எதிர்ப்பு கிளம்ப ஆரம்பித்தது. இன்று சமூக அங்கீகாரம் முக்கியம் என்பதால் பெண்கள் சமையல்கட்டிலிருந்து வெளிப்பட்டு எல்லாத் துறைகளுக்கும் வந்துவிட்டனர். அதனால் அவர்களுக்கென்று தனி வாழ்க்கை முறை ஏற்பட்டுள்ளது. இந்தப் பெரிய மாற்றத்தின் ஒரு வெளிப்பாடுதான் திருவிளக்கு பூஜை போன்ற பூஜைகள். தீபத்தை ஏற்றி நமஸ்கரித்து வந்த பெண்கள் இப்போது தீபத்தில் அம்பாளை ஆவாஹனம் செய்து பூஜிக்கிறார்கள். ஆயிரம் பேர் கூட்டாக இதைச் செய்யும்போது நூறு பேருக்காவது மெய்யான பக்தி இருந்தாலும் இந்தக் காரியத்தைப் போற்றத்தான் வேண்டும். ஆனால், இதைப் போன்ற பூஜைகளை ஏற்பாடு செய்து நடத்தும்போது போட்டி மனப்பான்மை கிளைத்து, வெறும் பகட்டான காரியமாக இவை மாறிவிடாமல் நாம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்."

**கா**ஞ்சி பீடாதிபதி ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகளின் ஐம்பத்தைந்தாவது ஜெயந்தியையொட்டி, கடந்த முதல் ஆடி வெள்ளிக் கிழமையன்று ஜன கல்யாண் அமைப்பு நடத்திய விளக்கு பூஜையில் சுமார் ஆயிரத்து இருநூறு பெண்கள் கலந்துகொண்டு சிறப்பித்தார்கள். (வண்ணப்படம்.) பெரியவரின் ஐம்பத்தைந்தாவது ஜெயந்தி என்பதால் பூஜை மாலை ஐந்து மணி ஐந்து நிமிடம் ஐந்து வினாடிக்குத் தொடங்கியது!

"பங்கு கொண்டு, பூஜை செய்த பெண்மணிகளிடம் ஐந்து ரூபாய்தான் வசூலித்தோம்" என்றார் ஜனகல்யாணின் முக்கிய உறுப்பினரும் உழைப்பாளருமான ஜி.பி. ஹரன். "இந்தப் பூஜையை நடத்தச் சுமார் இருபத்தைந்தாயிரம் வரை தேவைப்படும். புத்தம் புதிய ஸ்ரீ ராகவேந்திரா கல்யாண மண்டபத்தில்தான் பூஜையை நடத்தினோம். அதன் உரிமையாளர் ரஜினிகாந்த் இலவசமாக மண்டபத்தைக் கொடுத்து மின்சாரச் செலவையும் ஏற்று உதவியதால் சுமார் பத்தாயிரம் ரூபாய் வரை செலவு குறைந்தது. பூஜை செய்த பெண்கள் கொடுத்த கட்டணத்தோடு சில பேர் முன்வந்து கொடுத்த நன்கொடையையும் (சுமார் எட்டாயிரம் ரூபாய்) சேர்த்துப் போட்டு பூஜையை நடத்தினோம்.

"கற்பூரம் மட்டும் அறுநூறு ரூபாய்க்கு வாங்கினோம். எண்ணெய்ச் செலவு ஆயிரம் ரூபாய். தவிர ஒவ்வொருத்தருக்கும்,

அர்ச்சனை செய்ய ஒரு ரூபாய்க்குக் குங்குமமும், இரண்டு ரூபாய்க்குப் பூவும் கொடுத்தோம். அட்சதை, வாழை இலை, திரி, தொன்னை போன்றவற்றையும் நாங்களே வழங்கினோம்.

''சாதாரணமாகச் சர்க்கரைப் பொங்கல் தயாரித்து அம்பாளுக்கு நைவேத்யம் செய்வதுதான் சிறப்பு. ஆனால் பிரஸாதம் சாப்பிடுகிறேன் பேர்வழி என்று பக்தர்கள் புது கல்யாண மண்டபச் சுவர்களைப் பாழாக்கி விடுவார்களோ என்று எனக்கு உள்ளூரக் கொஞ்சம் கவலை. அதனால் சாஸ்திரத்துக்குச் சர்க்கரைப் பொங்கல் நைவேத்யம் செய்துவிட்டு, ஆயிரத்து இருநூறு லட்டு, ஆயிரத்து இருநூறு பேருக்குச் சுண்டல் தயாரித்து, பிளாஸ்டிக் பைகளில் 'பாக்' செய்து கொடுத்துவிட்டோம். பூஜையைப் பார்க்க வந்தவர்களுக்கும் பிரஸாதம் தரப்பட்டது.''

ஹிந்துக்களிடையே கூட்டு வழிபாடு வழக்கமாக இல்லாத போது சமீப காலமாக இந்தத் திருவிளக்குப் பூஜை பிரபலமாகி வருவதற்கு ஏதேனும் விசேஷமான காரணம் இருக்குமா.....? நமது உரத்த சிந்தனையை மறுத்துப் பேசினார் ஹரன்.

''கூட்டு வழிபாடு என்பது நமது கலாசாரத்தின் ஒரு பகுதியாக இருந்துதான் வந்தது. கோயில் திருவிழாவுக்கு அரசன் முதல் ஆண்டி வரை வடம் பிடிப்பார்கள்; திருநாளுக்கு ஒன்று கூடுவார்கள் இந்தக் கோலாகலங்களையெல்லாம் இப்போது மறந்துவிட்டோம். இட நெருக்கடியும் அதிகமாகி விட்டது. அதனால்தான் ஆசார்ய சுவாமிகள் கூட்டுப் பிரார்த்தனை முறையை மீண்டும் பிரபலப்படுத்த முயற்சி எடுக்க வேண்டும் என்று விரும்புகிறார்..... திருவிளக்கு பூஜையின் போது ஜாதி, வர்க்க பேதங்கள் பாராட்டாமல் நூற்றுக்கணக்கானோர் ஒருமைப்பாட்டுடன் சிரத்தையாகக் கலந்து கொண்டது ஆரோக்கியமான சிந்தனைக்கு அடையாளம்தானே!''

**— சீதா ரவி.**

அட்டை மற்றும் கட்டுரைக்கான வண்ணப் படங்கள்:

**யோகா**

# காட்டில் நடக்கும் படுகொலைகள்!

தந்தத்துக்காக யானைகளை வேட்டையாடிக் கொல்வதுபோல் காண்டாமிருகங்களையும் அவற்றின் கொம்புகளுக்காக வேட்டையாடுவது, ஆப்பிரிக்க நாடுகளில் மிக அதிகமாகிவிட்டது. காரணம், நமது சிட்டுக் குருவி லேகியத்துக்கு இருப்பதாகக் கருதப்படும் சக்தி காண்டாமிருகத்தின் கொம்புக்கு இருப்பதாக ஒரு மூட நம்பிக்கை!

காண்டாமிருகத்தை அழிவிலிருந்து காப்பாற்ற வன இலாகாவினர் ஒரு நூதன முயற்சியை மேற்கொண்டுள்ளனர். வேட்டையாடுவோரை முந்திக் கொண்டு, வன இலாகாவினர் தாங்களே காண்டாமிருகங்களை வேட்டையாடுகின்றனர். ஆனால் அவற்றைக் கொல்லாமல் மயங்கி விழச் செய்கின்றனர். இதற்காக மயக்க மருந்து ஊசி போடப் பிரத்தியேகத் துப்பாக்கிகள் பயன்படுத்தப்படுகின்றன. பின்னர் காண்டாமிருகங்களின் கொம்புகளை அறுத்து நீக்கிவிடுகின்றனர். கொம்பற்ற மிருகங்களை யாரும் வேட்டை ஆடிக் கொல்வதில்லை!



இவ்வாறு கொம்பு நீக்கப்பட்ட காண்டாமிருகங்களின் இயல்பான வாழ்வில் பாதிப்பு எதுவும் இருப்பதில்லையாம்.

தந்தத்துக்காக ஒவ்வோர் ஆண்டும் 70,000 யானைகள் ஆப்பிரிக்கக் காடுகளில் திருட்டுத்தனமாக அழிக்கப்படுகின்றன! வயதான ஆண் யானைகள் ஏற்கெனவே அழிந்துவிட்டதால் இப்போது இளம் யானைகளுக்கு ஆபத்து வந்துள்ளது. பத்து மில்லியனாக இருந்த யானைகளின் எண்ணிக்கை பத்து வருடங்களுக்கு முன் ஒன்றரை மில்லியனாகக் குறைந்து, தற்போது 65,000 – க்குள்தான் இருக்கும் என்று கணக்கிடப்பட்டுள்ளது. ஆண் யானைகள் மட்டுமே அழிக்கப்படுவதால், 1 : 99 என்ற அபாய விகிதாசாரத்தை எட்டியுள்ளது ஆண் – பெண் யானைகளின் எண்ணிக்கை.

அமெரிக்கா, இந்தியா மற்றும் பதின்மூன்று ஐரோப்பிய நாடுகள் யானைத் தந்த வியாபாரத்தைத் தடை செய்துவிட்ட போதிலும் ஜப்பான் மற்றும் சில கிழக்காசிய நாடுகளில் யானைத் தந்த வியாபாரம் நடந்து வருகிறது.

உலகம் முழுவதிலும் தந்த வியாபாரத்தைத் தடை செய்யும் கோரிக்கையைத் தென்னாப்பிரிக்கா, ஜிம்பாப்வே ஆகிய நாடுகள் எதிர்க்கின்றன. இந்த நாடுகள் தங்கள் வனங்களிலுள்ள யானைகளை அழிவிலிருந்து வெற்றிகரமாகக் காத்துவரும் போதே நிறையத் தந்தம் ஏற்றுமதியும் செய்து, ஏராளமாக அந்நியச் செலாவணி சம்பாதித்து வருகின்றன.

நன்றி: **இந்தியன் எக்ஸ்பிரஸ்**
**ஹிந்துஸ்தான் டைம்ஸ்.**

# ஒரே அலைவரிசை

வடிவேலு முதல் பெஞ்சாதியைத் தேடிப் போவான் என்று சரசு எதிர்பார்க்கவில்லை.

சாமிக்கண்ணு சொல்லித்தான் தெரிய வந்தது.

''யக்காவ்... ஒன் ஆம்பளையை மேலத் தெருவுல பார்த்தேன். நாலஞ்சு பேரோட சண்டை கட்டிக்கிட்டு இருக்காரு. நீ இங்கே என்ன பண்றே?''

அப்போதுதான் வேலை விட்டு வந்திருந்தாள். நாடார் மில் வேலை லேசுப்பட்டது அல்ல. கண் கொத்திப் பாம்பாக நின்று வேலை வாங்குகிற ஆசாமி அவர். இரண்டு வெற்றிலையைக் கிள்ளிப் போட்டுக் கொள்ளக் கூட அவகாசம் இல்லை. நெல்லைக் கொட்டி, அரைத்து, சூடு பறக்க ஆறப் போட்டு, அள்ளி மூட்டையிட்டு, சில் வைக்கிற வரைக்கும் ஓயாத வேலை.

இருட்டி ஒரு நாழிகை கழித்தே தூக்கு போசியைக் கையில் எடுக்க முடிந்தது.

வந்ததும், குளிக்க வெந்நீர் போட்டு ''அக்கடா....'' என்று சித்த நாழி உட்கார, இந்தச் செய்தி.....

''என்னது?'' எனத் திடுக்கிட்டாள் சரசு.

''மேலத் தெருவுலதானே அவரு சம்சாரம் இருக்கா?''

''ஆமா.....''

''நேத்திக்கு ஆறுமுகத்தார் மகனோட அவளுக்குச் சண்டையாம்ல?''

''சொல்லு.....''

''அவளை ஏதோ கெட்ட வார்த்தை பேசிட்டானாம். அதுக்கு இவரு நாயம் கேக்கப் போயிருக்காரு....''

''ம்? ம்?''

கத்தியில் செருகிய மாதிரி இருந்தது. எப்போதோ விட்டு விலகின உறவு. 'அந்த நாயி சகவாசமே வேணாம்னு வந்துட்டேன். இனி ஒங்கூடத்தான் இருக்கப் போறேன். என்ன புள்ளை சொல்றே?' என அவளது மடியில் விழுந்து இரண்டு வருடம் ஓடி விட்டது. இப்ப என்னவாம்? மறுபடியும் உறவு துளிர்த்துவிட்டதா?

தனக்குக் கூடத் தெரியாமல் வரிந்து கட்டிக் கொண்டு கிளம்புவதற்கு அதுதான் அர்த்தமா?

விசுக்கென்று எழுந்தாள். கொண்டையை முடிந்து சேலையை உதறிக் கட்டிக் கொண்டாள். கதவைப் பூட்டி, ''நீயும் வாடா....'' என விடுவிடுவென்று நடந்தாள்.

இரண்டு நாட்களுக்கு முன்பே காதில் விழுந்த விஷயம்தான். செண்பகமும் கூலி வேலைக்குத்தான் போய் வந்தாள். ஆறுமுகத்தார் மகன் பாபுவுடன் வட்டி வரவு செலவில் ஏதோ தகராறு. கொடுக்கல் வாங்கலில் மட்டுமல்ல.

அவனது நினைப்பு வேறு மாதிரி இருந்திருக்கிறது போலும்.

வாரக் கூலியன்று வசூலுக்குப் போவதுடன் நிறுத்திக் கொள்ளவில்லை. வழியில் கண்டால் சிரிப்பது. ''என்ன புள்ளே தனியாப் போறே?'' என்று பேசுவது....

'ஒண்டி சண்டியாய்' வாழ்கிறவர்கள் தவிர்க்க முடியாத சங்கதி இது. சரசு சந்திக்கவில்லையா? பதிலுக்கு ஏதோ சொல்லிவிட்டு நகர்ந்து விட வேண்டியதுதான். மனசு கெட்டியாக இருந்தால் எந்த ஆம்பளை நெருங்குவான்?

அவள் ஏதோ திமிராகச் சொல்லி இருக்கிறாள்.

அந்த வைராக்கியம் உள்ளவள் வாங்கிய கடனை விட்டெறிய வேண்டியதுதானே! இரண்டு வாரம் இழுவை போட,

''அடி என் ரோசக்காரப் பொம்பளையே... காசைக் குடுறீ....'' என்று கத்தியிருக்கிறான். சாதாரண வாய்ச் சண்டையாக ஆரம்பித்த விஷயம் தெருவே நாறிப் போகும்படியாய்...

சரசு உள்ளூர சந்தோஷப்பட்டாள் தன்னை அவள் படுத்தியதற்கெல்லாம் தண்டனை கிடைத்து விட்ட மாதிரி இருந்தது.

வடிவேலுவிடம் கூடச் சொல்லவில்லை எதற்குச் சொல்வது? பழையதை எல்லாம் கிளறி அவனது மனத்தில் சலனத்தை உண்டாக்கவா?

கடைசியில் அது இப்படி வந்து முடியும் என்று எதிர்பார்க்கவில்லை.

''எதுக்கு முடியுது... லேசுல விட்டுருவனா?'' மனசுக்குள் கறுவிக் கொண்டு, அதே வேகத்துடன் நடையையும் எட்டிப் போட்டாள் சரசு.

தெரு வெறிச்சென்று இருந்தது நடமாட்டம் குறைந்த அமைதி. இங்கொன்றும், அங்கொன்றுமாய்ச் சில கடைகள். தெரு விளக்கின் அரை இருள். இருமிக் கொண்டு போன ஒற்றை ஆள். அவளது

மும்தாஜ் யாசீன்

சிறு பிராயத்தில் எத்தனை பரபரப்பாக இருந்த வீதி அது?

''ஏன்னடா?''

''அதான்க்கா நானும் பாக்கறேன்....''

சாமிக்கண்ணுவுக்கு ஒன்றும் புரியவில்லை. சண்டையை நேரில் கண்டவனாயிற்றே. அதற்குள் எங்கே போய்த் தொலைவார்கள்?

சற்றுத் தள்ளி ஒரு டீக்கடையில் விசாரித்தான். ''நாய்களுக்கு என்ன வேலை... பொழுது விடிஞ்சா நூறு சண்டை. எதைக் கேக்கறே?''

''சித்த முந்தி மஞ்சள் பனியன் போட்டு ஒரு ஆளும் ரெண்டு மூணு பேரும்....''

''என்ன சனியனோ... ஆரு கண்டது?''

சாமிக்கண்ணு அவரை முறைக்க, ''நீ ஒரு இவன்....'' என்றாள் சரசு.

''சரசுதானே... என்னடி இந்த நேரத்துல இங்கன?'' விசாரித்தபடி நெருங்கி வந்தாள் ஒரு நடுத்தர வயது மாது.

சரசு திரும்பிப் பார்க்க, ஆச்சரியம். காமாட்சி மாமி. கொஞ்ச காலம் அவர்கள் வீட்டில் பாத்திரம் தேய்த்தது உண்டு. இருட்டிலும் அடையாளம் தெரிய —

''இல்லீங்கம்மா... தம்பியோட வந்தேன். அவன் கடைக்குப் போயிருக்கான்...''

''உன் புருஷனைத் தேடிக்கிட்டா? அவனை மூத்த குடியா வீட்ல பார்த்தேன். ஏதோ சண்டைன்னு பஞ்சாயத்து நடக்குது...''

சரசுவுக்குக் குப்பென்று வியர்த்தது. வீட்டிற்கேவா? அவனா?

அந்தம்மாள் நின்று பேசவில்லை.

''என்னக்கா....?'' என அருகில் வந்தான் சாமிக்கண்ணு.

''அவரு.... அவ வீட்டுக்கே போயிட்டாராம்டா.....'' கண்களில் நீர் தளும்பியது. குரல் தழுதழுத்தது.

''அடப்பாவி...'' என்றான் சாமிக்கண்ணு.

அவனுக்கும் என்ன செய்வது என்று தெரியவில்லை. ''மோசக்கார ஆளு. இப்படியா பண்ணுவாரு....''

''நான் வீட்டுக்குப் போறேன். நீ அங்க போயி என்ன ஏதுன்னு தெரிஞ்சுக்கிட்டு வா....'' பதிலுக்காகக் காத்திராமல் விடுவிடுவென்று நடந்தாள் சரசு.

**கொ**ஞ்ச நேரத்தில் எல்லாமே அஸ்தமித்துப் போன மாதிரி இருந்தது. இந்த இரண்டு வருஷங்களில் அவன் அவளைப் பற்றிப் பேசியது கிடையாது. அங்கு போனதும் கிடையாது. சரசு... சரசு என்று காலைச் சுற்றிக் கிடந்தவன். இப்படி ஒரே நாளில் மாற முடியுமா? ஏதாவது செய்வினை பண்ணியிருப்பாளோ?

தளர்ந்த நடையுடன் கதவைத் திறந்து உள்ளே வந்தாள்.

ஆத்திரம் அழுகையாக வெடிக்க, தரையில் உட்கார்ந்தாள். ''அய்யோ.... எஞ்சாமி....'' என தலையிலடித்துக் கொண்டு ஒப்பாரி வைத்தாள்.

வாழ்க்கையில்கொஞ்சம்கஷ்டங்களையா அனுபவித்திருக்கிறாள்?

ஓடிப் போன அப்பனுக்குப் பிறந்த தோஷத்தில் எட்டு வயதிலேயே பாத்திரம் தேய்த்திருக்கிறாள். கன்னத்தில் இடி வாங்கி இரகசியமாக அழுதிருக்கிறாள். பதின் மூன்று வயதில் — தோளில் கை போட்ட முதலாளியின் மகனைக் கண்டு பயந்திருக்கிறாள். சௌந்தர்யங்களைக் கனவுகளில் மட்டுமே கண்டு, நிஜத்தில் சித்தாளாகி, கண்டவனின் எச்சில் பார்வை பட்டு, 'எனக்கொரு வழி காட்டு ஆண்டவனே....' எனக் கலங்கி நிற்க....

வடிவேலுதான் கண்ணில் பட்டான். கல்யாணமானவன் என்று தெரியாமல்தான் மனத்தைப் பறிகொடுத்தாள்.

நெற்றியில் விழுந்த சுருட்டை முடி. கருத்த விண்ணென்ற தேகம். மில்லில் வண்டியோட்டியாக இருந்தான். மூட்டைகளைப் பாரம் ஏற்றத் துணைக்கு அவளைத்தான் கூப்பிடுவான். கை தொட்டுத் தூக்கி விடும் போது மனசுக்குள் பூப்பூக்கும். தானாகவே வலியப் பேசினாள். சிநேகிதம் பிடித்தாள். ''இந்தா சாப்பிடு....'' எனப் பொங்கியதைக் கொண்டு வந்து கொடுத்தாள்.

இரண்டு மாதம் சேர்ந்து வாழ்ந்த பிறகுதான் தெரிந்தது — அதுவும் அவனது மனைவி, ''அடி என் சக்களத்தி....'' என்று வாசலில் நின்று கூச்சல் போட்ட போது.

வடிவேலுவும் அப்போது வீட்டிலிருந்தான். ''ஏய்.... போக மாட்டே?'' என எழுந்து வந்தான். அவன் மிரட்ட மேலும் கத்தினாள்.

சரசுவுக்கு இனி அவனது சகவாசமே வேண்டாம் என்று வெறுத்துப் போய் விட்டது. இரண்டு மாதம் வரைக்கும் பேசாமல் உறுதியாகவே இருந்தாள். மூன்றாவது மாதம் பச்சைக் குழந்தை போல, ''என்னை மன்னிச்சுக்கோ....'' என அவன் தேம்பித் தேம்பி அழுத போது உறுதி சரிந்தது.

இனி என்ன செய்வதாம்? இழந்து விட்டதைத்தான் திரும்ப எடுத்துக் கொள்ள முடியும்? சமாதானப்படுத்திக் கொண்டு மறுபடியும் சேர்ந்து வாழ ஆரம்பித்தாள்.

அதற்குத் தண்டனையா இது?

**''அ**க்கா.... யக்காவ்....''

சாமிக்கண்ணு தொட்டு எழுப்பிய பிறகுதான் விழிப்பு வந்தது.

திடுக்கிட்ட மாதிரி எழுந்து உட்கார்ந்தாள். ''போய்ட்டு வந்தியாடா?''

''ம்.....''

''அங்கதான் இருந்தாரா?''

''ஆமா.... பஞ்சாயத்து முடிஞ்சிருச்சு.

இப்ப வந்துருவாரு....''

''இனி எதுக்கு இங்க வர்றது? அவ கிட்டயே போகச் சொல்லு....'' சரசுவின் குரல் தழுதழுத்தது. அவனெதிரில் அழுது விடாதிருக்கச் சிரமப்படுகிற மாதிரி இருந்தது.

சாமிக்கண்ணு புரியாமல் பார்த்தான்.

சற்று முன்பு மச்சானிடம் அவளுக்காகப் பரிந்து பேசி விட்டுத்தான் அவனும் வந்திருந்தான். சின்னப் பயலாக இருந்தால் என்ன? அனுபவத்தில் அறிந்து கொண்ட சங்கதிதானே எல்லாம்.

பஞ்சாயத்தில் உட்கார்ந்திருந்தவனைத் தனியே கூப்பிட்டு, ''வீட்ல அக்கா அழுதுக்கிட்டு இருக்கு. இப்படித்தான் சொல்லாம வந்துடறதா?'' என்று கேட்க —

''அழுகறதுக்கு என்ன நடந்துருச்சு இப்ப?'' என்றான் வடிவேலு.

''அதான் தெரியுதே. நான் வேற சொல்லணுமா?''

''என்னடா அறிவு கெட்டவனா இருக்கே...! நானும் எம் பொஞ்சாதியும் ஒண்ணா இல்லேங்கிறது வேற. அடுத்தவன் அவளைக் கேவலமாப் பேசறது வேற. அதுக்கெல்லாம் இடம் குடுத்துரப்படாது. நான் கட்டின தாலிதான் அவ கழுத்துல இன்னும் இருக்கு. இன்னார் பொஞ்சாதின்னு எனக்குத்தான் அசிங்கம். இன்னைக்கு இவனை விட்டுட்டா நாளைக்கு இன்னும் நாலு பேரு வாலாட்டிப் பார்ப்பான். அதுக்குத்தான் வந்தேன். பிரியத்துனால இல்லை. தெரிஞ்சுதா?''

அவன் சொன்ன தோரணையிலும், நேர்த்தியிலும் நியாயம்தான் என்று நினைக்கும்படியாகவே இருந்தது.

''போ.... பஞ்சாயத்து முடிஞ்சதும் வந்துடுவேன்னு சொல்லு....''

அதையெல்லாம் இங்கே சொல்ல முடி





"நீங்க என்கிட்டே வாங்கின கடனை இந்த ஜென்மத்துலே திருப்பிக் கொடுக்கவே மாட்டீங்களா?"

"அதுதான் வாங்கும் போதே சொன்னேனே... என் வாழ்க்கை முழுதும் உங்களுக்கு நன்றிக் 'கடன்' பட்டிருப்பேன்னு. அதை நீங்க புரிஞ்சுக்கவே இல்லையா?"

— கமுதி. எஸ். சேதுராமன்.



"ஏன் ராமசாமியிடம் சத்தம் போட்டே?"

"அவன் என்னைப் பற்றிப் பொய்ப் பிரசாரம் பண்றான் சார்!"

"என்னன்னு?"

"'அவர் லஞ்சம் வாங்க மாட்டார்; பணமே தராதீங்க'ன்னு பிரசாரம் பண்றான்!"

— மகிழ்நன்.

யுமா? சொன்னால் கோபித்துக் கொள்வாளா?

"என்ன சொல்லி அனுப்பிச்சாரு?"

"ஒண்ணுமில்லை.....

"அவ மேல ஆசை திரும்பிருச்சு. அதான்...."

"அப்படியெல்லாம் இல்லை. நீ சித்த சும்மா இரு...."

"உனக்குத் தெரியாதுடா.... அந்தாளு புத்தியைப் புதுசாவா பார்க்கிறேன்? ஒருத்தி இருக்கிறப்ப இன்னொருத்தியைப் புடிக்கிறது. ஆம்பளைன்னு திமிர். எதுவேணாலும் பண்ணலாம்னு நினைப்பு...."

"............"

"என்கிட்ட நடக்காது. நான் யாருன்னு நினைச்சே? வரட்டும்... வெளியே போ. இனி என் முகத்துல முழிக்காதேன்னு சொல்லப் போறேன். பாரு..."

சாமிக்கண்ணுவுக்குப் பயம் பிடித்தது. விபரீதமாகச் செல்லும் அவளது புத்தியைத் தடுத்து நிறுத்த வழி தெரியவில்லை. வீம்புக்காரி.

இதனால் என்னவெல்லாம் ஆகும்?

குடும்பம் குலைந்து, பழையபடி சீரழிந்து.... வழி காட்டவும், ஆதரிக்கவும் யார் இருக்கிறார்கள்?

"இப்ப என்ன ஆயிருச்சு... அங்கியே தங்கறேன்னா சொல்றாரு... பஞ்சாயத்து முடிஞ்சதும் இங்கதான் வரப் போறாரு...."

"வந்து.....

"உங்ககூட இருந்துக்கிட்டு....."

"த்தூ... அந்த நினைப்பு இருந்தா ஏண்டா அங்கே போகணும்?"

"அவரு கட்டின தாலி அவ கழுத்துல இருக்கேக்கா....."

சாமிக்கண்ணுவுக்குச் சட்டென்று வார்த்தைகள் வந்து விழுந்தன.

என்ன ஆயிற்றோ, சரசு சூடுபட்டவள் மாதிரி உதறிக் கொண்டு நிமிர்ந்தாள். ஸ்தம்பித்துப் போய் அவனையே பார்த்தாள். தனக்குள் ஏதேதோ யோசனைகளுடன்....

ஏன்... ஏன்... என்று குடைந்து கொண்டிருந்த கேள்விக்கு விடை இதுதானோ?

தலைகுனிந்து, பின்வாங்கி, தரையில் உட்கார்ந்தாள்.

சாமிக்கண்ணுவா சொன்னான்? நூற்றாண்டுகளாய்த் தேங்கி நிற்கும் உண்மை இல்லையா இது? அவனுக்கு இவ்வளவு தெரியுமா?

தாலி....

எவ்வளவு பெரிய விஷயம்! கழுத்தில் மூன்று முடிச்சை வாங்கிக் கொள்வது பாதுகாப்புக்கு மட்டும்தானா?

அடுத்தவனிடம் சண்டை எனத் தெரிந்ததும் பாய்ந்து கொண்டு போனவன், சிரித்துப் பழகியிருந்தால் அரிவாளை எடுத்திருப்பானோ? அவனுக்கு மட்டுமல்ல. தனக்கும் அப்படித்தானே. அதுதான் இரண்டு வருஷமாகப் பிரிந்திருந்தும் இன்னும் கழுத்தில் தொங்க விட்டுக் கொண்டிருக்கிறாளோ.

இந்த ஒரு விஷயத்தில் மட்டும் தானும், 'அவளும்' ஒரே வரிசையில் நிற்கிற மாதிரி இருந்தது. விருப்பத்துடன் வாழவும் பிடிக்காமல், வெறுப்பில் பிரியவும் முடியாமல், முளையில் கட்டிப்போட்ட மாடு மாதிரி...

பெண் என்கிறவள் எந்த மோசமான ஆணுக்கும் கௌரவப் பிரச்னை! அவன் ஒருத்தன் மட்டுமே அனுபவிக்கவும், அலட்சியப்படுத்தவும் முடிகிற வஸ்து... வெறும் கோபத்தையும், வீம்பையும் வைத்துக் கொண்டு தன்னால் என்ன செய்து விட முடியும்?

"கடவுளே!" கழுத்தில் மஞ்சள் கயிறைத் தொட்டுக் கொண்டு அவள் முணுமுணுக்க

"என்னக்கா.....?" என்றான் சாமிக்கண்ணு.

"ஒண்ணுமில்லை...."

அவனுக்கு அப்படி ஒரு பதிலைச் சொல்லும் போது பெரும் துக்கமாக இருந்தது சரசுவுக்கு.



# ஏன்?
# மூக்குத்தி
# தோடு
# அணிய வேண்டும்

சுமங்கலிகள் தனது கணவனின் நீண்ட ஆயுளுக்காகவும் சந்தோஷத்திற்காகவும், ஆரோக்கியத்திற்காகவும் மூக்குத்தி, தோடு அணிய வேண்டும்

ஜெயமங்கள ஸ்தோத்திரம்

---

எனவே எங்களது சுவையான இனிப்பு மற்றும் கார வகைகளை வாங்கி தங்களது மனைவிகளுக்கு கொடுங்கள்.

---



கல்யாண வைபவங்களுக்கு! சீர்முறுக்கு, சீர் முள்ளுத் தேன்குழல், சீர் அதிரசம், தேன்குழல், அப்பம், திரட்டுப்பால், பருப்புத் தேங்காய் வகைகள் முதலியவை செய்து தரப்படும்.

---

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

24, 2வது மெயின் ரோடு,
காந்தி நகர், அடையாறு,
சென்னை-600 020.
போன்: 412557

# ராஜீவ் ராஜ்யமேமேல்!

## பூட்டிய வீட்டில் அலறிய டி. வி.!

●● 'ரிமோட் கண்ட்ரோல்' டி. வி. வாங்கிய மறுநாள் கவனக் குறைவாக அதை சோஃபாவின் மேல் வைத்துவிட்டு, வீட்டையும் பூட்டிக் கொண்டு, கடைத் தெரு வரை போய் விட்டேன். பூட்டியிருக்கும் வீட்டில் திடீர் திடீரென டி. வி. 'ஆன்' ஆவதும், 'ஆஃப்' ஆவதும், திடீரென அலறுவதும், திடீரென வால்யூம் குறைவதும் கேட்டுப் பக்கத்துப் போர்ஷன் காரர்கள் தலைக்குத் தலை ஒவ்வொரு காரணம் கூறிக் கொண்டு வாசலில் குழுமி விட்டனர். திரும்பி வந்த நான், சோஃபாவுக்கடியில் ரிமோட் கண்ட்ரோல் சாதனத்துடன் ஒளிந்து கொண்டிருந்த எங்கள் விஷமக் கொடுக்கு நாய்க்குட்டிக்கு ஒரு பூசை கொடுத்தேன். அந்தச் சாதனத்தைக் கவ்விக் கொண்டு அது கூட்டத்தைத் தாண்டி ஓடியது! "அட, இதுதானா... ப்பூ!" என்று கூட்டமும் கரைந்தது.

— எஸ். கிருஷ்ணசாமி, சென்னை — 44.

## முட்டையில் முன்னேற்றம்!

●● சென்ற 27.7.89 இரவு 8.10 மணி அளவில் சென்னைத் தொலைக்காட்சி முதல் சானலில் 'இ ந் தி யா வி ன் தொழில் முன்னேற்றம்' என்ற நிகழ்ச்சி. இந்திய நாடு எஃகு உற்பத்தியில் தன்னிறைவு பெற்றுள்ள விவரத்தைக் கூறி, இத்துறை சம்பந்தப்பட்ட ஒருவரைப் பேட்டி கண்டார் ஒரு பெண்மணி. இவர் எஃகு என்பதை Egg—கு என்று உ ச் ச ரி த் தா ர். அடுத்து பேசிய ஓர் அதிகாரியும் இதே எஃகு என்ற சொல்லை Egg—கு என்று உச்சரிக்க, இந்தியா மேலும் முன்னேற Egg—கு உற்பத்தியை அதிகப்படுத்த வேண்டுமென்று நிகழ்ச்சியை முடித்தனர்!

— ந. இந்திரா, சென்னை — 45.



## யதார்த்தமில்லையே!

●● என் ஆறு வயது மகனுக்குப் பல் துலக்க பிரஷில் கொஞ்சம் டூத் பேஸ்ட் வைத்துக் கொடுத்தேன்.

"என்னம்மா இது, கொஞ்சமாக பேஸ்ட் வைச்சுத் தர்றே! டி. வி. யில் பிரஷ் நிறைய வைச்சுத் தர்றாங்களே!" என்றான்.

இப்படித்தான் முகத்திற்குப் பவுடர் போடும் போது, "ஏம்மா... கொஞ்சம் பவுடர் போடுறே! டி. வி. யில் நிறையக் கொட்டற மாதிரி பூசி விடேன்" என்று கேட்கிறான்.

டி. வி. யில் வரும் உணவு மற்றும் குளிர்பான விளம்பரங்களிலும் பெரிய பெரிய கோப்பைகள் நிறைய அவற்றை அருந்துவதாகக் காட்டுகிறார்கள்.

அறுபது சதவிகிதத்துக்கும் மேற்பட்டவர்களான நடுத்தர வர்க்கத்தினருக்கு, இந்த ஆடம்பரங்கள் சாத்தியமில்லை என்பதை விளம்பரதாரர்கள் மறந்து விடுகிறார்களே!

— எஸ். வத்சலா கணேசன், சென்னை — 75.

## பேரனோடு பார்க்கலாம்!

●● என் இரு பிள்ளைகள் 'அபூர்வ சகோதரர்கள்' படம் பார்க்கக் கிளம்பிக் கொண்டிருந்தார்கள். பதினொரு வயது சிறிய மகன் என்னையும் சினிமாவுக்குக் கூப்பிட்டான். நான் டி. வி. யில் காண்பிக்கும் போது பார்த்துக் கொள்ளுகிறேன் என்று கூறினேன். அதற்கு அவன் 'அப்படியானால் நீ அரவிந்தோடுதான் சினிமாவைப் பார்க்க முடியும்' என்றான். எங்கள் வீட்டில் 'அரவிந்த்' என யாரும் இல்லாததால் 'யார் அந்த அரவிந்த்?' எனக் கேட்டேன். அவன் "என்னுடைய பையன் — உன்னுடைய பேரன்தான்!" என்று கூறியதும் வீட்டிலிருந்த அனைவருக்கும் சிரிப்பை அடக்க முடியவில்லை.

— த. கமலா, சென்னை — 81.

## புது டி. வி. புதிர்!

●● டி. வி. வாங்கிய புதிதில், மகாபாரதம் பார்த்துக் கொண்டிருந்தோம். அப்போது அங்கு வந்த என் சகோதரர், எப்போது டி. வி. வாங்கினீர்கள்? " எனக் கேட்டார். அருகிலிருந்த என் பேரன் மனோகர்; "நான் சொல்வதற்குப் பதில் வந்தால் உங்கள் கேள்விக்குப் பதில் வரும்" என்று ஒரு புதிர் போட்டான்: "இன்று வரை இந்த டி.வி.யில் ஒரு



பூ மொட்டு நிகழ்ச்சி, இரண்டு மகாபாரதம், இரண்டு ராமாயணம், இரண்டு சித்ர கீதம் நிகழ்ச்சிகள் பார்த்துள்ளோம். அப்போது எத்தனை நாளாச்சு என்று கணக்குப் போடுங்கள்...'' என்றான்.

கணக்குப் போட்டுக் குழம்பிப் போனார் என் சகோதரர். பிறகு அவனே சொன்னான்: ''டீ. வி. வாங்கிப் பன்னிரண்டு நாட்களாகின்றன. ஒரு புதன் கிழமை கரண்டு கட்டு என்பதால் ஒரு பூ மொட்டு நிகழ்ச்சி பார்க்கவில்லை. இன்று இரண்டாம் முறையாக மகாபாரதம் பார்த்தோம். எனவே பன்னிரண்டு நாட்கள் கணக்கு!'' என்றான்.

— ஜானகி குமார், நெய்யூர் அஞ்சல்.

**மஹாதேவனே கதி!**

●● ஒரு வெள்ளிக்கிழமை இரவு என் மாமா வீட்டில் டீ. வி. பார்த்துக் கொண்டிருந்தேன். மாமாவின் நண்பர் ஒருவர் சோர்ந்த முகத்துடன் வந்தார். ஆபீஸ் வேலையில் ஒரு சின்ன தப்பு பண்ணி விட்டாராம். ''நாளைக்குப் போய் எப்படியும் சரி பண்ணி விடலாம். இருந்தாலும் அந்த மானேஜர் கிழம் காலங்கார்த்தால பிலு பிலுன்னு பிடிச்சுக்கும். அதுகிட்டே சமாளிக்க நீ ஏதாவது ஐடியா சொல்லுவேன்னு தான் வந்தேன்,'' என்றார் மாமாவிடம். என் மாமா கொஞ்ச நேரம் யோசனை செய்துவிட்டு, ''இதுக்கெல்லாம் அந்த 'மஹாதேவன்' தான் உதவி பண்ண முடியும்'' என்றார். நண்பரோ ''என்னப்பா கடவுளைப் போய்க் கேட்கச் சொல்றே. நடக்கிற விஷயமாகச் சொல்லு,'' என்றார். மாமா உடனே, ''நான் சொன்னது கடவுளை இல்லைப்பா, இப்ப 7.40 க்கு டீ. வி. யில் எதிரொலி நிகழ்ச்சியில் மஹாதேவன் வருவார். அவர் நேயர் கடிதங்களைச் சமாளிக்க மழுப்பறதைப் பார்த்து நீயும் கத்துக்கோ'' என்றார். இன்றும் எதிரொலி நிகழ்ச்சி பார்க்கும் பொழுதெல்லாம் எங்களுக்கு அதுதான் நினைவு வரும்.

— எஸ். மீரா, கடலூர் — 1.

**''சாப்பிட மாட்டேன் போ!''**

●● என் ஐந்து வயதுப் பெண் காயத்ரி கீரை சாப்பிடப் படுத்தினாள். ''டீ. வி. யில கூடச் சொல்றா பாரு. நிறையப் பச்சைக் காய்கறி கீரையெல்லாம் சாப்பிட்டாதான் உடம்புக்கு நல்லதுன்னு. ஏன் கேட்க மாட்டேங்கிறே. உன்னைச் சாப்பிட வைப்பதற்குள்ளே என் பிராணனே போகிறது'' என்று கோபித்துக் கொண்டேன்.

உடனே என் பெண், ''அப்படியெல்லாம் கோச்சுண்டு சொன்னா, நான் சாப்பிட மாட்டேன் போ! டீ. வி. யில, சொல்ற மாதிரி, 'வாடி ராஜாத்தி'னு தூக்கிண்டு, 'சத்துள்ள காய், கீரை, பருப்பெல்லாம் கொடுக்கிறேன், சாப்பிட மாட்டேங்கிறியே! எல்லாம் சாப்பிட்டாத்தானே ஆரோக்கியமா பெரியவளா வளர முடியும்'னு சொல்லணும்'' என்றாள். எனக்குக் கோபம் போய், சிரிப்புத்தான் வந்தது.

— ஜெ. லதா, சென்னை — 4.




**ராஜீவ் ராஜ்யமே மேல்!**

●● பள்ளியில் படிக்கும் என் உறவினர் பெண் மிகவும் அமைதியானவள். எங்களுடன் டீ. வி. யில் ராமாயணம் பார்த்துக் கொண்டிருந்தாள். இலக்குமணன் தன் தமையன்பால் கொண்ட அபரிமித அன்பினால் இராமனுடன் காட்டிற்குச் செல்லும் நிகழ்ச்சி நடந்தது. தொடர் முடிந்ததும் பெரியவர்கள் மிக்க உணர்ச்சிவசப்பட்டவர்களாக இலக்குமணனைப் புகழ்ந்தனர். அதைக் கேட்ட அந்த இளம் பெண் மிக்க சினத்துடன், ''ஆமாம், மிகவும் அவசியம்! சிறிதும் பொறுப்பின்றி மனைவியை விட்டு விட்டு இப்படியா காட்டிற்குச் செல்வது? ஊர்மிளாவினால் தன் கணவனுடன் சண்டை போட்டுத் தடுக்க இயலவில்லை. மூன்று தாய்மாரும் அறிவுரை கூறாது வாய் மூடி இருக்கிறார்கள். ஒரு வருடம் கணவன், மனைவி சேர்ந்து வாழாமல் போனாலே விவாகரத்து கிடைக்கும் இந்த ராஜீவ் ராஜ்யத்தைவிட, பதினாலு வருடங்கள் பிரிந்து வாழ்ந்தும் விவாகரத்துக் கோர இயலாத, கோழைகளாய்ப் பெண்கள் வாழும் ராம ராஜ்யம் எந்த வகையில் சிறந்தது? என்று பாதித் தமிழும் பாதி ஆங்கிலமுமாகப் பொரிந்து தள்ளி விட்டாள்.

'காலம் பேசுகிறது' என்று முத்தாய்ப்பு வைத்து அந்நிகழ்ச்சியைத் தள்ளினாலும், நம் சிறுவர்களின் எண்ணங்கள் போகும் வழி சரியானதா? தவறானதா? என்று எண்ணி என் மனம் கலங்கத்தான் செய்கிறது.

— லலிதா மகாதேவன், திருநெல்வேலி.

# என் உயிர்த் தோழன்

**பாரதிராஜா**

**அத்தியாயம் 18**
**புயல் புறப்பட்டது!**

"நீ சாராயத்து மேல சத்தியமா என் னிக்கிச் சாராயம் சாப்பிடறதை நிப்பாட் டறையோ அன்னிக்கித்தான் அவன் கண் ணாலமே பண்ணிக்குவானாம். நீ இன்னா சொல்றே...?" படாரென்று சொல்லி விட் டான், பங்கி முருகேசு.

"அடப் போடா பொறம்போக்கு நாயி. உன்னாண்ட கேட்டேன் பாரு, என் புத்திய ஜோட்டால அடிக்கணும். அவன் சொல் லல்லேன்னாக் கூட நீயே அவனை உசுப்பி வுட்டுருப்பியே...?"

"அட, நீ இன்னாக்கா அவனைப் பத்தி இன்னும் புரிஞ்சுக்காம இருக்கியே...? தீக் குளிக்கிறேன்னதுக்கு அவனைப் போலீ சுலே புடிச்சிகினு போயி வரிவரியா கோடு போட்டு அனுப்பினாங்களே, அன்னிக்கி நீ சாராயம் போட்ட விஷயம் கூட அவ னுக்குத் தெரிஞ்சு போச்சு... எங்கைல, போலீ சுல அடிச்சது கூட வலிக்கலேடா மாமு. எனக்கு இந்த வேதனைதான் பெரிசா கீதுன்னு சொல்லி எப்படி மனசு கஷ்டப் பட்டான் தெரியுமா...?"

"அட சர்த்தான் வுடுறா... என் வேதனை எனக்கு... கட்டினவன் கஷ்டப்பட்டுக் காப் பாத்தல. சரி, அத்தான் வுடு. சந்தோசமா இருக்குன்னிட்டு இந்தக் கர்மாந்தரத்தைப் பயக்கி வுட்டுட்டுக் கயவாளிப்பய கம்பி நீட்டிட்டான்.

"இப்ப அவன் பூட்டான். இந்தப் பாயாப் போனப் பயக்கம் மட்டும் அட்டை மாதிரி ஒட்டிக்கிட்டு வுட மாட்டேங்குது. சனி யன்..." என்றவாறே மூக்கைச் சிந்திவிட் டுத் தன் வேலையைப் பார்க்கச் சென்று விட்டாள் பொன்னம்மா.

ஆடி மாதம் அடை மழை என்பதற்கு அடையாளமாக வானம் கிழிந்து பூமியிலி ருந்து ஈர்த்த நீரை வட்டியும் முதலுமாகத் திருப்பிக் கொண்டிருந்தது. குப்பமே வெள் ளக்காடாய் மாற, வீட்டு வாசலில் அமர்ந் திருந்த தருமன் திடீரென்று ஏதோ ஞாபகம் வந்தவனாய்த் தடதடவென்று வீட்டுக்குள் ஓடிச் சென்று ஒரு பாயையும், போர்வை யையும் எடுத்துக் கொண்டு வெளியே பாய்ந் தான். பின் அதே வேகத்தில் உள்ளே பாய்ந்து பாயை ஒரு பிளாஸ்டிக் கவரில் சுற்றிக் கொண்டு வெளியே ஓடினான். அவன் செய் வது புரியாமல் பொன்னம்மாள் அவன் முன்னாலே ஓடி வந்து, "டேய், இந்த மழை யிலே எங்கேடா போறே?" என்று வினவு வதற்கு முன் மறைந்திருந்தான். தொப்ப லாக நனைந்திருந்த தருமன், மாமி வீட்டு வாசலில் நின்றிருந்தான். "டேய், நோக் கென்ன பைத்தியமாடா பிடிச்சிண்டிருக்கு. இப்படிக் கொட்டற மழையிலே அப்படி என்ன தலைபோகிற காரியம் பண்ற மாதிரி இப்ப இங்கே வந்தே?" என்று மாமி பிரி யத்துடனும், உரிமையுடனும் தருமனைக் கண்டித்தாள்.

"அட, அது ஒண்ணுமில்லே மாமி. திடீ ருன்னு இப்படி மழை புடிச்சிருச்சா, இன்னா டான்னு குந்திக்கினு இருந்தப்பதான் யோசிச்சா, இந்தப் பொண்ணு குளிருலே இன்னா பண்ணுன்றது நெனவுக்கு வந்துச்சு. அதான் டக்குனு வூட்லேர்ந்து ஒரு பாயையும், போர்வையையும் எடுத்துக்கினு ஓடியாந் தேன்."

"ஏண்டா, எங்களண்ட அந்தப் பொண்ணை எப்ப விட்டுட்டுப் போனியோ அப்பவே அவ எங்காத்துப் பொண்ணா விட்டாடா. அவளுக்கு நாங்க ஒரு பாய் கூடக் கொடுக்க மாட்டோம்னு நோக்கு தோணித் தாடா...?"

"அட, அதுக்கில்லே மாமி. உங்களுக்கு இன்னாத்துக்கு அனாவசியமாத் தொந்தர வுன்னிட்டு பார்த்தேன். அதான்." என்ற வாறே நெளிய...

"ஏண்டா போர்வையும் பாயும் நனைஞ் சிடக் கூடாதுன்னு அதை ஒரு பாலிதீன் கவர்லே சுத்தி எடுத்துண்டு வரத் தெரிஞ்சு தோல்லியோ? ஆனால் அதே உன் உடம்பு மழையிலே நனையறதேங்கற எண்ணம் நோக்கு வரல்லியோ...? மேலே எதையா' வது மழைக்குப் போர்த்திண்டு வரக் கூடா

தோடா மண்டு...?''

''அட, இந்த மழை இன்னா செய்யப் போவுது மாமி நம்மளை? நம்முளுது ரிக்ஷா வலிக்கிற உடம்பு மாமி, கருங்கல்லாட்டம்... நம்மளை டச் பண்ண முடியாது அ ஆம்... சர்த்தான், யக்காவாண்ட வேறே சொல்லாம வந்துட்டேன். நான் போயாறேன் மாமி,'' என்று கூறியவாறே தான் கொண்டு வந்திருந்தவற்றை மாமியிடம் கொடுத்துவிட்டுத் திரும்பினான். உள்ளேயிருந்து நடந்தவை அனைத்தையும் கேட்டுக் கொண்டிருந்த சிட்டுவின் விழிகள் ஈரமாகியிருந்தன.



கூத்திக் கொண்டே குடிசைக்குள் நுழைந்தான் தருமன்...

''யக்கா... யக்கா... எங்கேகிறே நீயி?'' பின்புறம் ஏதோ வேலையாக இருந்தவள், ''இன்னாத்துக்குடா கூவுறே?'' என்றவாறே வர, ''இன்னாத்துக்குக் கூவுறன்னா... ஆமா என்ன இட்டுக்கினு போயி பொண்ணு பாத்தியே அது இன்னா என் வசதிக்குப் பாத்தியா, இல்லை உன் வசதிக்கு ஏத்தாப்புலே பார்த்துக்கின்னியான்னு எனக்கு இப்பவே தெரிஞ்சாவணும்...''

''ஐயே, இப்ப இன்னா ஆயிடிச்சன்னு ஒரேயடியா கூவுறே...?''

''இன்னும் இன்னாத்த ஆவணுங்கறே...? அந்தச் சூளைமேடு சுப்பராயன் கள்ளச் சாராயம் ஓட்றவன், சுத்தப் பொறுக்கின்னு ஊரே சொல்லுது... அவன் வூட்டுலே பொண்ணு எடுத்துட்டா உனக்குச் சரக்கு ஓசியிலியே கெடைக்கும்னு செட்-அப்பா அங்க என்னை இட்டுக்கினு போயிட்டியா?''

''டேய், சொம்மா வார்த்தையை வுடாதே! அப்பாலே அள்ள முடியாது. உனக்குப் புடிக்கலேன்னா புடிக்கலேன்னு சொல்லு... இன்

னாத்துக்கு என்னாலதான் உனக்குப் புடிக்க லேன்னு புச்சா பிரச்னையைக் கௌப் புற... வாழப் போறவன் நீ. உனக்கே புடிக்க லேன்னா இப்பவே கண்ணாலத்தை நிப் பாட்டச் சொல்லிப் பொண்ணு வூட்லே சொல்லிடறேன், திருப்தியா...?"

"அத்த செஞ்சிட்டு வந்து அப்பாலே திருப்தியான்னு கேளு, அப்ப சொல் றேன்," கத்திவிட்டுச் சென்றவனையே கண் இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தாள் பொன்னம்மா.



ஐயர் வீட்டு வாசலில் ஏகக் கூட்டம் கூடியிருந்தது. கூட்டம் சேர்த்த பெருமை டில்லி பாபுவையும் அவனது சகாக்களையும் முறையே சேரும்... டில்லிபாபு குரலெடுத் துக் கத்திக் கொண்டிருந்தான். "இன்னா ஐயரு! வக்கீல் தொழில்ல குப்பை கொட்ட முடியலேன்னு தொழிலையே மாத்திக் கின்னியா...? மாமாவாயிட்டியா...? இப்ப... லேடீஸ் வெச்சி பிஸினஸ் பண்றியாமே...? ஊரே நாறுதுய்யா உன்னாலே... மாமிதான் ஏஜண்டா... த... பாரு. நல்லாக் கேட்டுக்க. இன்னும் ரெண்டு நாளு டைம் தர்றேன். அதுக்குள்ளே அந்தப் பொண்ணை என் கைலே சேர்க்கலே, அப்பாலே நடக்கற துக்குநான் பொறுப்பில்லே...நான் ரொம்பப் பொல்லாதவன் உஷாரா இருந்துக்க... டேய் வண்டியைக் கௌப்புங்கடா போவ லாம்," என்றவாறே ஒரு பெரிய குழப் பத்தை விளைவித்துவிட்டு அந்த இடத்தை விட்டு அகன்றிருந்தான் 'டில்லி பாபு.' மாமி வீட்டில் பூட்டிய கதவுக்குப் பின் சிட்டுவும் மாமியும் கட்டுப்படுத்த முடியாது கதறி அழுது கொண்டிருக்க, வக்கீல் அவர்களுக்கு ஆறுதல் கூறிக் கொண்டிருந்தார்.

சவாரி முடிந்து குடிசைக்குத் திரும்பிய தருமன் குடிசையில் ஐயர் வீட்டு மாமி குந்தி யிருப்பதைக் கண்டு குழப்பமானான். முதலில் மாமி, "சும்மா கண்டுக்கினு போவ வந்துருக்குதாக்கும்," என்று நினைத்து, "இன்னா மாமி, இம்மாந் தொலைவு,ஏதாச் சும்னா சொல்லி வுட்டுருந்தா நானே வூட் டாண்டே வந்திருப்பேனே," என்றவாறே மாமியை நோக்கித் திரும்பியவன் திடுக்கிட் டான்.

மௌனமாய்க்கண்ணீர் உகுத்துக்கொண் டிருந்த மாமி இப்போது துக்கம் தாங்காது மெல்லிய குரலில் விசும்பத் தொடங்கியிருந் தாள். "மாமி, இன்னா மாமி ஆச்சு...? ஐயே இன்னாத்துக்கு மாமி அய்வுறே...? தே யக்கா...! எனக்கு இப்ப இன்னா ஆச்சுன்னு தெரியணும்... அயாதே மாமி... பேஜாராகீது பார்க்கச் சொல்ல... யக்கா இன்னா ஆச்சு யக்கா?"

தருமனின் கத்தலுக்குப் பொன்னம்மா வெகு தெளிவாக, மாமி வீட்டில் டில்லி பாபு செய்த தகராறை நேரில் பார்த்தவர்கள் கூட வியக்கும் அளவுக்கு அழகாக விவரித் தாள்.

தருமன் உஷ்ணத்தின் உச்சியை அடைந்திருந்தான். கோபத்தில் அளவுக்கதிகமாக இரத்த ஓட்டம் தலையை நோக்கிப் பாய்ந்து கொண்டிருந்தது அவன் கண்களில் தெரிந்தது...

பொதுவாகக் குப்பத்துக் குடிமகன்கள் தங்களது வீரத்தையும் கோபத்தையும் மட்டுமில்லாமல் சோகத்தையும் சந்தோஷத்தையும் மிகைப்படுத்திக் கொள்வதற்குக் கூடச் சாராயத்தின் உதவியை நாடித்தான் செல்வார்கள். ஆனால் தருமனுக்கு அந்தப் பழக்கமெல்லாம் அறவே இல்லாததோடு குணமுள்ள அவனிடத்தில் கோபம் இயற்கையிலேயே சற்றுக் கூடுதலாக அமைந்திருந்தது.

சாதாரணமாக வீண் வம்புக்குச் சென்று பழக்கப்படாதவன் தருமன்... அவனுக்கு அதில் ஒப்புதலுமில்லை... ஆனால் தனக்கு வேண்டிய ஒருவருக்கு ஏதேனும் தீங்கிழைக்கப்பட்டால் அது தனக்கே ஏற்பட்ட ஓர் அவமானமாய்க் கருதி அடிபட்ட நாகமாய்ச் சீறி விடுவான். அந்தச் சீற்றத்தில் சத்தியமான ஒரு நியாயமும் இருக்கும்.

தருமன் இப்போது சீறினான். டில்லிபாபுவைத் தீண்டினால்தான் அவன் சீற்றம் அடங்கும். குடிசையை விட்டு ஒரு குட்டிப் புயலாக வெளிப்பட்டவன் ''டேய் சம்பத்து,'' என்று பெருங்குரலெடுத்துக் கூவினான்... மணி ஒன்பதை நெருங்கிக் கொண்டிருந்தது. குப்பத்து ஆண்மகன்கள் அநேகம் பேர் அன்றைய வசதிக்கேற்பப் போதையேற்றி முடித்திருக்கும் நேரம்... தருமனின் குரல் கேட்டு, சம்பத்து நாலு கால் பாய்ச்சலில் எங்கிருந்தோ ஓடி வந்தான்...

''இன்னா தருமா? இன்னாத்துக்குக் கொரலு வுட்டே...?''

''டேய் சம்பத்து... நம்ப புள்ளிங்களையெல்லாம் இட்டுக்கோ... த்தா... இன்னா ஏதுன்னு இப்போ ஏதும் எங்கைலே கேட்காதே... சேகரு கைல சொல்லி அவன் ரெண்டு ஆட்டோவையும் ரெடி பண்ணிக்கச் சொல்லு... மறக்காம... எல்லாத்தையும் கைல சாமான் எடுத்துக்கச் சொல்லு... த்தா... இன்னாத்துக்குன்னு கேக்கறியா...? நேரா கொய்யாத்தோப்புக்குப் போறோம்... அங்கே அந்த பாடு டில்லியைத் தனியா வலிச்சிக்கினு வந்து தாறுமாறா நாலு காட்டு காட்றோம்... அவனுக்கு சப்போர்ட்டுக்கு யாரு வந்தாலும் அவன் பொறுக்கி பொறம் போக்காத்தான் இருப்பான்... அப்டி எவன் வந்தாலும் அவனையும் பொளந்துடணும்... நான் சொன்னேன்னு சொல்லிச் சிவன் கடையிலேருந்து நாலு கிரேட்டு சோடா பாட்டிலை வாங்கி ஆட்டோவுலே ஏத்திடு. நான் பங்கியைக் கண்டுக்கினு வந்துடறேன்... இன்னா சர்த்தானா...?''

''நாங்க சொன்னா ஒனக்கு இம்மா நாளும் கிண்டலா இருந்துச்சு... உடுங்கடா... த்தா, பாவம் பொழைச்சிப் போறான்... பொழைச்சிப் போறான்னு சொல்லிக்கினே இருந்தே... இப்ப அந்த டில்லி பாபு ஆட்டைக் கடிச்சு... மாட்டைக் கடிச்சு. கடைசிலே உன்னாண்டவே வேலையைக் காட்டிக்கிறானா? நீ எங் கைலே சொல்லிட்டே இல்லே! வுடு! த்தா... இன்னிக்குப் பொளக்குறதுலே சாவுற வரைக்கும் கொய்யாத்தோப்புல கிறவங்களுக்குக் குயில் குப்பம் பேரைக் கேட்டாலே பேதியாவணும்... நீ போய்ப் பங்கியாண்ட மேட்டரைச் சொல்லிட்டு வா... இங்கே இருந்து கரெக்டா 11.30 மணிக்குக் கெளம்பிடுவோம், நான் புள்ளிங்களையெல்லாம் கோத்துக்கினு கோயிலாண்ட வந்து நிக்கறேன், கரெக்டா வந்துடு...'' சம்பத்து போருக்குப் புறப்படும் படை வீரனின் உற்சாகத்தோடு கிளம்பினான்.

(தொடரும்)

---

இதழில்...

# காஷ்மீரைக் காப்பாற்ற முடியுமா..?

-தலைப்பு ஓவியர் கையெழுத்து



# ஒரு போஸ்ட் கார்டு போதும்!....

ஆகவே நானும் விவேகானந்தா கல்வி நிலையத்தில் ஆங்கிலம் கற்க விரும்புகிறேன். எனவே, இப்பயிற்சி பற்றிய தகவல் புத்தகத்தையும் விண்ணப்ப மனுவையும் கீழ்க்கண்ட எனது முகவரிக்கு உடனே அனுப்பவும்.

முகவரி:
B. சுதாகர் :
30, ஆத்துளம் பிள்ளை சந்து
வடக்கு ஆவணி மூல வீதி
மதுரை - 625006




To
விவேகானந்தா கல்வி நிலையம்,
தபால் பெட்டி எண் 4986
No.9, மேட்லி ரோடு,
தி. நகர்,
சென்னை
PIN 600017

உங்களுக்கும் உங்களது முன்னேற்றத்திற்கும் இடையில் இப்பொழுது உள்ள தூரம் ஒரு போஸ்ட் கார்டு தான் என்று நாங்கள் கூறினால் அது சற்று மிகையாகத் தோன்றும். ஆனால் உண்மை அதுதான்.

நீங்கள் வாழ்க்கையில் முன்னேறுவதற்கு ஆங்கில மொழியில் போதிய பயிற்சியின்மை ஒரு தடையாக இருந்திருந்தால்........

மற்றவர்கள் ஆங்கிலத்தில் பேசும் போது அதை ஓரளவு புரிந்து கொண்டும், அதற்கு ஆங்கிலத்திலேயே பதிலளிக்க முடியவில்லையே என்ற குறை உங்களிடம் குடி கொண்டிருந்தால்,

பல புத்தகங்களைப் படித்தும் ஆங்கிலத்தில் பேச முடியவில்லையே என்ற சலிப்பு உங்களுக்கு ஏற்பட்டிருந்தால்,

நீங்கள் எதிர்பார்க்கும் முன்னேற்றத்தை இப்பொழுது அடைய ஒரே ஒரு போஸ்ட்கார்டுபோதும்...ஆமாம்!

ஆங்கிலத்தில் இலக்கணப் பிழையின்றி கடிதங்கள் கட்டுரைகள் எழுத வேண்டும், தயக்கமின்றி சரளமாகப் பேசவேண்டும் என்ற உங்களது விருப்பத்தை ஒரு போஸ்ட் கார்டில் எழுதி தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்று போற்றப்படும் விவேகானந்தா கல்வி நிலையத் திற்கு இன்றே அனுப்புங்கள்.

நீங்கள் மேற்கொள்ள வேண்டிய பயிற்சியைப் பற்றியும் மற்ற தகவல்களையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைப்பார்கள்.

வீட்டிலிருந்த படியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் இந்த எளிய பயிற்சி முறையை நீங்கள் மேற்கொள்ளலாம்.

"நேர்முகப்பயிற்சியும் உண்டு."

என்ன?.....எங்கே கிளம்பி விட்டீர்கள்? போஸ்ட் கார்டு வாங்கத்தானே?

உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி துவங்கிவிட்டது.

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி

**விவேகானந்தா கல்வி நிலையம்**
**9, மேட்லி ரோடு,**
**தி. நகர், சென்னை - 17.**

NAGA

வட்டமேஜை

# தீப்பெட்டியைத் தொடவே பிடிக்கவில்லை!

* முதல் பரிசு பெற்றச் சிறுகதையான 'அரும்பு' இதயத்தை முறுக்கிப் பிழிவதைப் போன்ற தாங்க முடியாத சோகத்தில் ஆழ்த்தியது. கதையைப் படித்து விட்டு அடுப்பைப் பற்ற வைக்க தீப்பெட்டியை எடுத்தால், என் கண்முன் செல்வியின் சோகமான முகம் நிழலாடுவது போலிருக்கிறது.

மங்கைநல்லூர், ஆர். செல்வராணி.

* அட்டையில் அழகான இரண்டு ''அரும்புகளை'' மலரச் செய்து விட்டு இதழினுள் மேலாண்மைப் பொன்னுச்சாமியின் ''அரும்பை'' வெளியிட்டு இதயத்தைக் கனக்கச் செய்து விட்டீர்கள். பரிசுச் சிறுகதை ஆசிரியருக்கு மனமார்ந்த பாராட்டுக்கள். கல்கிக்கும்தான்.

இராஜபாளையம், பாலசுந்தரம்.

* சுஜாதாவின் ''அடுத்த நூற்றாண்டு'' தொடர் அபாரம்! இவ்வளவு அரிய தகவல்களை உள்ளடக்கிய இக் கட்டுரையின் ஒவ்வொரு வரியும் பட்டை தீட்டிய வைரம்.

சென்னை — 90, அ. ராமச்சந்திரன்.

* கரிசல் மண்ணின் வாசனையுடன் மனிதர்களின் உள்ளுணர்வையும் ஆசாபாசங்களையும் படம் பிடித்துக் காட்டிய 'நாற்காலி' நாடகம் அற்புதம்.

வடுகவிருட்சியூர், ஆர். அமுதா.

* இரண்டாவது சூரியனின் உதயமே இத்தனை தகிக்கிறதே! இன்னும் போகப் போக என்ன ஆகுமோ? ஆரம்பத்திலேயே எங்களைக் கட்டிப் போட்ட பாலகுமாரனுக்குப் பாராட்டுக்கள்.

பாபனாசம், ப. மணிமுடி.

* நான் பிறப்பதற்கு முன்பே பிரபலமாயிருந்த குழந்தை நட்சத்திரங்களின் அபூர்வ புகைப்படங்களை மீண்டும் வெளியிட்ட கல்கிக்கு மனம் நிறைந்த பாராட்டுக்கள். அறந்தை நாராயணன் கட்டுரை அருமை!

திருச்சி — 4, சிவிதா எழிலன்.



குழந்தை கமல்

* நான் 1951 — இல் அன்னை என்ற படத்தில் கோபி என்ற பாத்திரமாகத் தோன்றி, பிறகு பல படங்களில் ''அன்னை'' சேதுவாகப் பலரது வரவேற்பினைப் பெற்று நடித்திருக்கிறேன். அறந்தை மறதியாக என்னை மட்டுமல்ல; நிரபராதி என்ற படத்தில் மது, கமல், பிரபாகரன், சேகர், ஸ்ரீதர் போன்றவர்களையும் விட்டுவிட்டது ஆச்சரியமாக உள்ளது.

சென்னை — 7, பி. சேதுமாதவன்.
(மாஸ்டர் சேது)

* உங்களால் நேதாஜியுடன் ஒப்பிடப்படும் பிரபாகரனின் நிரந்தரக் கொள்கை என்ன? எந்தத் தமிழ் மக்களுக்காகப் போராடுவதாகப் பிரபாகரனும் அவரது கூட்டமும் கூறி வருகின்றனரோ அதே தமிழின மக்களைத்தான் அவர்கள் அதிகம் கொன்றிருக்கின்றனர்! தங்கள் நிரந்தரக் கொள்கையான 'தமிழ் ஈழத்தை'ப் பிரேமதாசாவிடம் விற்று விட்டார்கள்! பிரபாகரனை நேதாஜி போன்ற உயரிய தலைவர்களுடன் ஒப்பிட்டு, நேதாஜியைக் கேவலப்படுத்தாதீர்கள்.

பேரளம், ஜீ. வி. அருள்.

* 'இரண்டாவது சுபாஷ் சந்திரபோஸ்' படித்தேன். நெகிழ்ந்தேன். அதில் ஓர் உண்மையை எழுத விட்டு விட்டீர்கள். பிரபாகரனை ஒரு சுதந்திரப் போராட்ட வீரனாக ஆக்கியவற்றுள் ஒன்று, ர. சு. நல்லபெருமாள் எழுதி கல்கியில் வெளியான 'கல்லுக்குள் ஈரம்' நாவல். இதனை பிரபாகரனே இரு ஆண்டுகளுக்கு முன் Front line பத்திரிகை பேட்டியில் தெரிவித்திருக்கிறார்.

திருச்சி, எஸ். வீரபாகு.

* ''கல்கி'' 6.8.89 இதழில் என்னைப் பற்றி எழுதிய போது டிக்கெட் விலை உயர்வு பற்றிக் குறிப்பிட்டதில் ஒரு விளக்கம் தேவைப்படுகிறது.

தமிழக முதல்வரிடம் கேளிக்கை வரி குறைப்பு பற்றித் திரையரங்கு உரிமையாளர்கள் சங்கத்தின் சார்பில் முறையிட்டோம். அதற்கு அவர், இன்றைய சூழ்நிலையில் தமிழக அரசு வரிகளைக் குறைக்கும் நிலையில் இல்லை என்றும், வேறு ஏதாவது வழி இருந்தால் தெரிவிக்குமாறும் சொன்னார்கள். எல்லாத் துறைகளிலும் விலைவாசி உயர்வு இருப்பது போல் தியேட்டர் விஷயத்திலும் செலவுகள் கூடியிருப்பதால் சினிமா டிக்கெட் விலையை உயர்த்த அனுமதி வேண்டினோம். டிக்கெட் விலை குறைவாக இருப்பதினால், கள்ள மார்க்கெட்காரர்கள்தான் கொழிக்கிறார்கள். அந்தப் பணம் டிக்கெட் விலையை உயர்த்துவதன் மூலமாகத் திரையரங்குகளுக்குக் கிடைத்திட வாய்ப்பு இருக்கிறது என்று சொன்னோம். அப்படியானால், அரசுக்கு வந்து கொண்டிருக்கும் மொத்த வரித் தொகை குறையாமல் இருக்கும் அளவுக்கு டிக்கெட்டுகளின் விலையை உயர்த்திடலாம் என்று அனுமதி தந்தார். அவ்வாறே செய்ய, தற்போது உள்ள புதிய முறையில் அரசுக்கு வரி இழப்பு இல்லாமல் ஏற்கெனவே வருவான வரியை விட 1 சதவிகிதம் அதிகமாகவே கிடைக்கிறது.

டிக்கெட் விலை உயர்வு முழுவதையும் தியேட்டர்காரர்களே எடுத்துக் கொள்வதில்லை. விநியோகஸ்தர், தயாரிப்பாளர், அரசு ஆகிய அனைவருக்கும் அதில் பங்கு இருக்கிறது.

சென்னை — 6, ஜி. உமாபதி.

* வலம்புரி ஜான் என்ன செய்து கொண்டிருக்கிறார் என்ற கேள்விக்கு

''கோபாலபுரத்தின் கதவுகளைத் தட்டிக் கொண்டிருக்கிறார்'' என்று தராசு உண்மைக்குப் புறம்பான தகவலை எழுதியிருக்கிறார். தேர்தலுக்குப் பின் தனிப்பட்ட முறையில் ஒரே ஒரு முறை முதல்வரை நான் சந்தித்திருக்கிறேன். அவரது கட்சியில் சேருவதற்காக அல்ல. எதற்காகச் சந்தித்தேன் என்பதை நேரம் வருகிற போது சொல்லுவேன்.

இப்போது சரித்திர பாடத்தில் பி.எச்.டி. பண்ணிக் கொண்டிருக்கிறேன்; இலக்கியக் கூட்டங்களில் பேசுகிறேன்; எனது கவிதைகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பதுடன் ஆங்கிலத்தில் ஒரு நாவலும் எழுதிக் கொண்டிருக்கிறேன்.

சென்னை — 94, வலம்புரி ஜான்.

# மக்களின் துயருக்குத் தங்கச் சட்டம்; நேருவின் வசதிக்குக் காமராஜ் திட்டம்!



* காமராஜ்: மோசடிக்கு உதவிய ஒரு மெய்யான தியாகம்.

நேருவின் நிதி மந்திரி மொரார்ஜி தேசாய், பாயக் காத்திருந்த ஸி. ஆரின் பேனாவுக்குத் தமது புதிய கொள்கைகள் மூலம் வேலை கொடுத்தார். அபரிமிதமாக வரி விதித்தார். 'கம்பல்ஸரி டெபாஸிட்' என்ற கட்டாயச் சேமிப்புத் திட்டத்தின் அடிப்படையில் குறைந்த வட்டிக்கு மத்திய தர வகுப்பினரின் பணத்தைக் கொண்டு போனார். மேலும் இந்திய மக்களின் தங்க நகை மோகத்தைக் குணப்படுத்துவதாகக் கூறிக் கொண்டு, தங்கக் கட்டுப்பாட்டுச் சட்டம் கொண்டு வந்தார். மொரார்ஜியின் கறுகறுப்பும், நேர்மையும் ஸி. ஆருக்குப் பிடித்தமானவை. அதனால் இருவரிடையேயும் நட்பு நிலவி வந்தது. ஆனால் மொரார்ஜியின் புதிய சட்டங்களும் அபரிமித வரிவிதிப்பும் ஸி. ஆருக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. 'கம்பல்ஸரி டெபாஸிட்' சட்டம் ஸி. ஆரின் நோக்கில் 'தாங்க முடியாத கொடுமை' என்பதோடு, 'அந்தக் கட்டாயச் சேமிப்பு நாட்டின் செல்வத்தைப் பெருக்கும் முதலீடாகப் போவதுமில்லை. பலன் ஏதுமற்ற துன்பத்தை அளித்ததோடு சரி. புதிய வரிகள் மூலம் மக்களைச் சித்திரவதை செய்வதில், அரசு இன்பம் கா்ண்பதாகத் தோன்றுகிறது' என்றார் ஸி. ஆர்.

தங்கக் கட்டுப்பாட்டுச் சட்டம்தான் ஸி. ஆருக்கு மாபெரும் தவறாகத் தென்பட்டது. புதிதாகத் தயாரிக்கப்படும் எந்தத் தங்க ஆபரணமானாலும் அதற்குப் பதினாலு காரட் தங்கம்தான் பயன்படுத்தப்படலாம் என்றது சட்டம். இதன் மூலம் தங்கத்திடம் மக்களுக்கு உள்ள மோகம் குறையும் என்றும், தங்கத்தை இந்தியாவுக்குள் கடத்தி வருவது குறையும் என்றும் இவற்றின் உடன் விளைவாக அரசாங்கக் கடன் பத்திரங்களில் மக்களின் முதலீடு அதிகரிக்கும் என்றும் மொரார்ஜி எதிர்பார்த்தார்.

இந்தத் திட்டம் அறிவிக்கப்பட்ட மறுகணமே இதனைக் ''கொள்ளை'' என்று வர்ணித்தார் ஸி. ஆர். 'நமது பெண்மணிகள் கழுத்திலும் காதிலும் அணியும் தங்க நகைகள் பேராசை கொண்டவர்களின் கண்களை உறுத்துகின்றன!' சுயராஜ்யாவில் அவர் மேலும் எழுதினார்:

''தங்கம் என்பது அழகான விஷயம் என்பது மட்டுமல்ல; அரசு விநியோகிக்கும் காகிதப் பணத்தைவிட மதிப்பு மிக்கதாக அனைவராலும் கருதப்படுகிற ஒன்று. கஷ்டப்பட்டுச் சம்பாதிக்கும் ஒவ்வொரு குடும்பமும் சேமிப்பைத் தங்க நகைகளில் முதலீடு செய்கிறதெனில் அது, தங்கத்தை ஒரு மேலான வங்கி என்று கருதுவதால்தான். எழுதப் படிக்கத் தெரியாதவர்கள் கூட இந்த வங்கியைப் பயன்படுத்தலாம். ஆனால் எவ்வளவுதான் ஆழ வேரூன்றியுள்ள பழக்க வழக்கமானாலும் அதனையும் தகர்த்தெறியும் மூர்க்கத்தனத்துடன் அரசு நடந்து கொள்கிறது.'' (2.2.63)

ஸி. ஆர். எச்சரித்தபடியே ஆயிற்று. மொரார்ஜி தேசாய் பிரபலப்படுத்த விரும்பிய பதினாலு காரட் நகைகளைச் சீந்துவாரில்லை. பல்லாயிரக்கணக்கான பொற்கொல்லர்கள் வேலை இழந்து வருவாயின்றித் தவித்தனர். சிலர் தற்கொலை செய்து கொண்டனர். புதிய சட்டத்தைக் கண்டு பயந்து போன சாமானிய மக்கள் அறியாமையால் தங்கள் நகைகளை அடகுக் கடை முதலாளிகளுக்கு மலிவு விலையில் விற்று விட்டனர். இப்படி ஏராளமான மக்கள் அவதிப்பட்டாலும் தங்கத்தின் பால் மோகம் குறைந்து போய் விடவில்லை. ஏழைகள்தான் ஏமாந்து போனார்களே தவிர, பணக்காரர்கள் மேலும் பணம் பண்ணிக் கொழுத்தார்கள். சிறிய சிறிய வியாபாரிகளும் பொற்கொல்லர்களும் தாம் வேலை இழந்து தவித்தார்களேயன்றி, மோசடிக்கு அஞ்சாத பெரிய பெரிய வியாபாரிகள் சட்டத்தை ஏய்த்து, கள்ளச் சந்தையில் கறுப்புப் பணத்தை உலவ விட்டுத் தங்கத்தை வாங்கியும் விற்றும் அபரிமித லாபம் பெற்றார்கள். தங்கக் கட்டுப்பாட்டுச் சட

டத்தை ரத்துச் செய்ய வேண்டும் என்றும் மொரார்ஜி ராஜினாமா செய்ய வேண்டும் என்றும் ராஜாஜி தவிர வேறு பலரும் கோர ஆரம்பித்தனர். ஒரு விநோதமான விதத்தில் 1963 ஆகஸ்டில் மொரார்ஜியின் ராஜினாமா நிகழ்ந்தது. அதற்கு மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு தங்கக் கட்டுப்பாட்டுச் சட்டம் ரத்தாகியது.

சீனப் படையெடுப்பு நேருவுக்கு மட்டுமின்றி மக்களுக்கும் ஒரு பெரிய அதிர்ச்சி என்றால், அதைத் தொடர்ந்து மொரார்ஜி தேசாயின் கடுமையான வரி விதிப்புகளும், இதர கொள்கைகளும் மக்களைப் பெரிதும் கலக்கியிருந்தன. இதன் பிரதிபலிப்பை 1963 மே மாதம் நடந்த இரு முக்கியமான நாடாளுமன்றத் துணைத் தேர்தல்களில் காண முடிந்தது. இரண்டிலுமே காங்கிரஸ் தோற்றது. இரண்டுமே நேருவின் சொந்த மாநிலமான உ. பி. யில் நடந்தவை என்பதோடு இரண்டிலும் எதிர்க்கட்சியினர், நேருவை வன்மையாக விமர்சித்த ஆசார்ய கிருபளானி, ராம்மனோகர் லோகியா ஆகியவர்களை நிறுத்தியிருந்தனர். எனவே அவர்களின் வெற்றி, நேருவின் தோல்வியாகவே கருதப்பட்டது.

"'நேரு மந்திரம்' இனி பலிக்காது" என்று குதூகலத்துடன் எழுதினார் ஸி. ஆர். "அலை திசை திரும்பிவிட்டது. ஆட்சியின் தலைவர் கடவுள் அல்ல, தேவைப்படுமானால் வேறு ஒருவருக்கு இடம் விட்டு ஒதுங்க வேண்டிய மக்களின் பிரதிநிதிதான் என்பது நிரூபணமாகி விட்டது."

எண்பத்து ஐந்து வயதில் ஸி. ஆர். தமது உடலில் புது ரத்தம் ஓடுவது போல் உணர்ந்தார். மூன்றாவதாக ஒரு துணைத் தேர்தல் நடக்கவிருந்த ராஜ்கோட்டுக்குச் சென்றார். காங்கிரஸின் கோட்டை என்று கருதப்பட்ட அந்தத் தொகுதியைத் தம் வசப்படுத்தும் முயற்சியில் அங்கு எம். ஆர். மசானி ஈடுபட்டிருந்தார். ஜூன் மாதம். கடுமையான வெயில். ரொட்டி கடும் அடுப்பில் வேகுவது போல் உணர்ந்தார் ஸி. ஆர். ஆயினும் காங்கிரஸுக்கு மூன்றாவதாக ஓர் அடி கொடுத்து, மசானியை நாடாளுமன்றத்துக்குள் மீண்டும் அடியெடுத்து வைக்கச் செய்ய உதவும் வாய்ப்பை நழுவவிட ஸி. ஆர். விரும்பவில்லை. மசானி, தேர்தலில் வெற்றி பெற்று ஸி. ஆரை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தினார்.

* மொரார்ஜி: கட்டாயச் சேமிப்பு: 'தாங்க முடியாத கொடுமை.'



எதிர்க்கட்சிகளுக்குத் தெம்பு கூடியது என்றால் காங்கிரஸ்காரர்களோ சோர்ந்து போயினர். ஆனால் ஏதேனும் ஒன்று செய்து மக்களின் கவனத்தைத் திசை திருப்பும் ஆற்றல் அவர்களிடம் இல்லாமல் போகவில்லை. தமிழ்நாட்டில் தி. மு. க. வின் பலம் நாளுக்கு நாள் அதிகரித்து வருவதை உணர்ந்த காமராஜர், தாம் முதல்வர் பதவியை ராஜினாமா செய்துவிட்டுக் கட்சிப் பணியில் இறங்கி, காங்கிரஸைப் பலப்படுத்த வேண்டும் என்ற கருத்தை வெளியிட்டார். இச்செயல், 'பதவியைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருப்பதுதான் காங்கிரஸின் பிரதான நோக்கம்' என்ற குற்றச்சாட்டுக்குப் பதிலளித்தாற் போலவுமிருக்கும் என்று கருதினார். நேரு இந்த யோசனையை ஏற்றுக் கொண்டது மட்டுமல்ல; இதே திட்டத்தைக் காமராஜ் தவிர வேறு பலர் விஷயத்திலும் அமல்படுத்தினார்! வேறு பல மாநில முதல்வர்களும் மத்திய அரசில் அவரது சகாக்களும் ராஜினாமாக்களை எழுதித் தருமாறு கோரப்பட்டனர். பதவி துறந்து கட்சிப் பணியில் ஈடுபட விரும்புவதாகவும் அதனால் ராஜினாமா செய்வதாகவும் அவர்கள் எழுதித் தருவதை ஏற்பதும் ஏற்காததும் நேருவின் முடிவுக்கே விடப்பட்டது!

நேருவின் விருப்பத்தைப் பூர்த்தி செய்ய எல்லாருமே அவசரப்பட்டனர். ஆனால் அதே நேரத்தில் தாங்கள் இருட்டடிப்புச் செய்யப்படாமல் இருக்க வேண்டுமே என்று உள்ளூரப் பிரார்த்தித்தனர். மொரார்ஜி, லால் பகதூர் சாஸ்திரி, ஜகஜீவன்ராம், எஸ். கே. பாட்டீல் ஆகிய மத்திய அமைச்சர்களின் ராஜினாமாக்களும் பஞ்சாப், ஒரிஸ்ஸா ஆகிய மாநில முதல்வர்களான கெய்ரான், பட்நாயக் ஆகியோரின் ராஜினாமாக்களும் ஏற்கப்பட்டன. காமராஜ் திட்டத்தை நேரு, உயரப் பறக்க விரும்பியவர்களின் இறக்கைகளைக் கத்தரிக்க உபயோகித்தார். அதே நேரத்தில் இது, 'காங்கிரஸ்காரர்களின் தியாகம்' என்பதாக மக்களுக்கு உணர்த்தப்பட்டது.

'இந்தத் தியாகத்தில் ஜவாஹர்லால் பங்கேற்கவில்லை' என்பதை அழுத்தமாகச் சுட்டிக்காட்டினார் ஸி. ஆர். "முக்கியமான காங்கிரஸ் அமைச்சர்களும் முதலமைச்சர்களும் ராஜினாமா செய்து கொண்டிருக்கும் போது அவர்களை இந்த நாடகத்தில் ஆட்டி வைக்கும் பிரதமர், தில்லியில் பதவி நாற்காலியைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கிறார்... எல்லாமே ஏமாற்று ஸ்டண்ட் வேலை எனவும் கேலிக் கூத்து எனவும் நிரூபணம் ஆகிவிட்டது!"

(தொடரும்)

ஜார்ஜுக்கு ஒரு விசித்திரமான கனவு வந்தது. பக்கத்து வீட்டுப் பார்வதியின் கரம் வேலியைத் தாண்டித் தன் வீட்டுப் பக்கம் நீள, தன் கை அதனைப் பற்றுவதாகக் கனவு... விடிந்ததும் பார்வதியைக் கூப்பிட்டு இந்தக் கனவை விவரித்தார். ''இதைப் பற்றி நீங்க என்ன நினைக்கிறீங்க பார்...?'' — கேட்டு முடிப்பதற்குள், பார்வதி தன் வீட்டுக்குள் 'ஓடியே' போய்விட்டிருந்தார்.

பார்வதிக்கு ஒரு பக்கம் அதிர்ச்சி, மறு பக்கம் குழப்பம் — கவலை. 'எந்தவித எதிர்பார்ப்பும் இல்லாமல் கொண்டிருந்த நட்பில் இப்படி ஒரு திருப்பமா?' என்று மனத்தின் ஒரு பக்கம் பதற, மற்றொரு பக்கத்தில் 'நம்மைக் கூட விரும்புவதற்கு ஒரு நாதியிருக்கிறதா' என்று இலேசான சந்தோஷம் கலந்த வியப்பு.

பத்தாம் வகுப்பு படிக்கும் போது, 'த்ரோபால்' விளையாடுகையில் பந்து வேகமாகக் கண்ணில் பட, விழித்திரை நிரந்தரமாகச் சிதைந்து போய்விட்டது பார்வதிக்கு. டாக்டர்கள் கைவிரித்து விட்டதால் வாழ்க்கையும் சிதைந்து போய் விட்டதாகக் கருதி, கிட்டத்தட்ட மனநோயாளி நிலைக்கு வந்து விட்டவரைத் தேற்றி, நம்பிக்கையூட்டி, படிக்க வைத்தவர் அவரது தந்தை. பள்ளிப் படிப்பு முடிந்து கர்நாடக இசைக் கல்லூரியில் சேர்ந்து பயின்று பிறகு இசை ஆசிரியையாக அரசுப் பள்ளியில் பணியில் சேர்ந்து... இப்போது வாழ்க்கையில் மீண்டும் ஒரு திருப்புமுனை — கிறிஸ்துவரான ஜார்ஜை மணப்பதா...?

ஜார்ஜுக்குப் பதில் சொல்லும் பொறுப்பைத் தமது சகோதரர்களிடம் விட்டு விட்டார் பார்வதி.

இரண்டு வருடங்களுக்கு முன் ஜார்ஜ்— பார்வதி பதிவுத் திருமணம் பெற்றோர்களின் சம்மதமின்றித்தான் நடந்தது. பார்வதிக்குப் பெண் குழந்தை பிறந்ததும் குடும்பம் மீண்டும் கலகலப்பாகி ஒன்று சேர்ந்தது. ஜார்ஜ்—

# கருணையில் தொடங்கி, கனவாய் மலர்ந்து, காதலாய்க் கனிந்து...

பார்வதி அந்தச் சந்தோஷத்தை முழுமையாக அனுபவிக்க இயலாமல் பார்வதிக்குத் திடீரென்று பாராலிடிக் ஸ்ட்ரோக் ஏற்பட்டுப் படுத்த படுக்கையாகி விட்டார்.

''அந்தச் சில மாதங்களைச் சமாளிக்க எனக்கு எங்கிருந்துதான் தைரியம் வந்ததோ, தெரியாது!'' என்கிறார் ஜார்ஜ். தனியார் மருத்துவமனையில் ஆபரேஷன் முடிந்து அரசு ஆஸ்பத்திரியில் பார்வதிக்குச் சிகிச்சை தொடர்ந்த போது கைக்குழந்தையை நெஞ்சில் போட்டுக் கொண்டு மனைவியின் பக்கத்திலேயே இருந்து பணிவிடைகள் செய்தார் ஜார்ஜ். சிகிச்சை முடிந்து சக்கர நாற்காலியில்தான் வீடு திரும்பினார் பார்வதி.

''சக்கர நாற்காலியில் என்னைக் கட்டிப் போட்ட இந்த ஸ்ட்ரோக்குக்குப் பிறகு என்னால் பழையபடி எல்லா வீட்டு வேலைகளையும் சுறுசுறுப்பாகச் செய்ய முடியவில்லை...'' — வருத்தப்பட்டுக் கொண்டார் பார்வதி. (அவருக்கு உதவ ஜார்ஜின் அக்கா மகள் உடன் தங்கியிருக்கிறார்.)

பூந்தமல்லியிலுள்ள பார்வையற்றோர் அரசுப் பள்ளியில் இசை ஆசிரியையாகப் பணியாற்றும் பார்வதிக்குப் பள்ளியிலேயே குவார்ட்டர்ஸ் ஒதுக்கப்பட்டுள்ளது.

பெரிய பெரிய சோதனைகளைச் சந்தித்த போதிலும் மனம் தளரவில்லை இந்தத் தம்பதி.

''சினிமாவில் மட்டுமே கண் தெரியாதவர்களைப் பார்த்திருந்த எனக்கு, பார்வதியுடன் வாழ்க்கை நடத்த ஆரம்பித்த பின்னர்தான் சில உண்மைகள் புரிந்தன. பார்வையற்றவர்கள் மற்றவர்களைப் போல் சகஜமான வாழ்க்கை நடத்த முடியும். அவர்களால் முக பாவங்களைக் கொண்டு மனிதர்களைப் புரிந்து கொள்ள முடியாது என்பதால் சற்று அதிகமாகப் பேசுவார்கள். ஆண், பெண் என்று ரொம்ப பேதம் பாராட்டாமல் அவர்கள் பேசுவதைக் கொண்டு அவர்களைத் தவறாக எடை போடக் கூடாது. நம்பிக்கையை அளிப்பதன் மூலம் நிறைவான அன்பை அடைய முடியும். பார்வதியும் நானும் மிகவும் சந்தோஷமாயிருக்கிறோம்'' என்கிறார் ஜார்ஜ்.

சந்திப்பு: **எஸ். ஆர்.**

படம்: **ஹரி.**





# இசையில் கணக்கு வேண்டும்; வழக்கு வேண்டாம்!

'சங்கீத சூடாமணி' விருது பெற, தில்லி யூனிவர்சிடியிலிருந்து சென்னை கிருஷ்ணகான சபாவுக்கு வந்திருந்தார் 'டி. ஆர். எஸ்.' என்று செல்லமாக அழைக்கப்படும், வித்துவான் டி. ஆர். சுப்பிரமணியம்.

சரளமான ஆங்கிலத்தில் உரையாடும் டி. ஆர். எஸ்., ஆங்கில இலக்கியத்தில் எம். ஏ. பட்டம் பெற்றவர். ஆரம்பத்தில் பின்னி கம்பெனியிலும், எஸ்ட்ரெலா பாட்டரி நிறுவனத்திலும் வேலை பார்த்திருக்கிறார்.

''ஏன் வேலையை விட்டுவிட்டீர்கள்?''

''கச்சேரிகளுக்காக அடிக்கடி லீவு எடுக்க வேண்டி வந்தது. ஒன்று கச்சேரிக்குப் போக வேண்டும். இல்லாவிட்டால் கம்பெனி வேலைக்கு ஒழுங்காக வரவேண்டும்! என்றார்கள். ஸ்போர்ட்ஸ்மேனுக்குச் சலுகை காண்பிப்பது போல, கலைஞர்களுக்கும் சலுகை காண்பித்தால் என்ன? என்று கேட்டேன். அவர்கள் மறுத்த போது வேலையை உதறிவிட்டு முழுநேர வித்துவானாக மாறினேன்.''

1949 — இல் சென்னையில் கர்நாடக இசைக் கல்லூரி ஆரம்பித்த போது, 'முதல் பாட்ச்'சில் சேர்ந்தவர் டி. ஆர். எஸ். (இரண்டாவது 'பாட்ச்'சில் சீர்காழி.)

''அதற்குச் செம்மங்குடி சீனிவாசய்யர் தான் காரணம். மியூசிக் காலேஜ் ஆரம்பிக்கப் போகிறார்கள். அதில் போய்ச் சேர்ந்துவிடு என்றார். முசிறிதான் குரு.''

1964 — இல் தில்லிப் பல்கலைக் கழக இசைத் துறையில் 'மியூசிஷியன்' வேலைக்குச் சேர்ந்த பிறகு, இருபத்தைந்து வருடங்களாக, தில்லியில்தான் வாசம். ஆனால் கச்சேரிகளுக்காகப் பல மாநிலங்களுக்கும், பல சபாக்களுக்கும் விஜயம் செய்ததுண்டு.

''நீங்கள் சங்கீதத்தில் கணக்கு வழக்கு அதிகம் செய்கிறீர்கள் என்று ஒரு குற்றச்சாட்டு உண்டு. கர்நாடக சங்கீதத்துக்குக் கணக்குவழக்கு அவசியம்தானா? உங்களையும் ரசிகர்களையும் அது பிரித்து விடாதா?''

''கணக்கு ஓரளவுக்குத் தேவைதான். கணக்கு அதிகமானால்தான் வழக்கு ஆகிறது. நான் கணக்கையும் விட்டுக் கொடுப்பதில்லை. இனிமையையும் விட்டு விடுவதில்லை. இரண்டையும் சாமர்த்தியமாகக் கலந்தே கொடுக்கிறேன். நாசுக்குக் கெட்டு விடாதபடி கணக்கையும் இசையோடு இழைத்து விடுகிறேன். கடவுள் எனக்கு இதில் வெற்றியே கொடுத்திருக்கிறார்... மிருதங்கத்தில் பாலக்காடு மணி அய்யர் இதைச் சாதிக்கவில்லையா? நாயனாப் பிள்ளை காலத்திலிருந்தே சங்கீதத்தில் கணக்கு இருந்திருக்கிறது! கோனேரிராஜபுரம் வைத்தியநாதய்யரின் சங்கீதம் முழுக்க முழுக்கக் கணக்குத்தான். அதில் இசையோ இனிமையோ இல்லை என்று பல வித்துவான்கள் அவரைப் பகிஷ்கரித்தனர். பிறகு என்ன ஆயிற்று? அவரை 'நாதயோகி' என்று கொண்டாடவில்லையா...? என் கச்சேரிகளில் இப்போதும் எனக்குப் 'பல்லவி பாடுங்கள்!' என்று சீட்டு வருகிறது!''

''இந்த இருபத்தைந்து வருட தில்லி உத்தியோகத்தில், மறக்க முடியாதபடி அனுபவம் ஏதாவும் இருக்கிறதா?''

''தில்லி பல்கலைக் கழக இசைத் துறையில், பல நாட்டு மாணவ மாணவியரும் கர்நாடக இசை பயில்கிறார்கள். வியட்நாம், சீனா மாணவர்கள் கூட உண்டு. டகாகோ என்ற ஜப்பானியப் பெண் கர்நாடக இசையில் — எம். ஏ. பட்டம் வாங்கி, நம்மவர் மாதிரியே பிரமாதமாகக் கச்சேரிகள் செய்கிறார். ஆனால் ஒரே ஒரு வட இந்திய மாணவரோ மாணவியோ கூட கர்நாடக இசையைக் கற்க இதுவரை முன்வரவில்லை!''

— சித்தார்த்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கெ. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

REGISTERED NO. M. 4392

Registered as Newspaper in Srilanka